# கோடை அசதியை நொடிப் பொழுதில் விரட்டுவது க்ளாக்ஸோஸ்-D®



**அருந்துவீர் க்ளாக்ஸோஸ்-D,**
**அருந்துவதற்கினிய வழிகள் பல.**

கோடைச் சூடு ஏற ஏற, வாடிச் சோர்ந்து விடுகிறீர்கள் விரைவிலே, தெம்பு போன இடமே தெரிவதில்லை.

எடுத்திடுவீர் குளுமையூட்டும் க்ளாக்ஸோஸ்-D. இனிதே கலக்கிடுவீர் ஒரு தம்ளரிலே இரண்டு ஸ்பூன்கள்.

அருந்தும்போதே, அடடா, புதுத் தெம்பு துடித்தெழ வைக்குது க்ளாக்ஸோஸ்-D, நொடிப் பொழுதிலே.

அதுவன்றோ உச்சிகுளிரும் உணர்வு.



குடிநீரிலே



நேரடியாக வாயிலே



எலுமிச்சம் சாற்றிலே



காப்பியிலோ, தேநீரிலோ

## இலவசம்!

ரூ. 1.25 பெறுமானமுள்ள

**3-தம்ளர் அடுக்கு செட்:**

ஒவ்வொரு 700 கிராம் **க்ளாக்ஸோஸ்-D®** டப்பாவுடனும் கிடைக்கும்.

**முந்துங்கள்! சரக்குகள் இருப்பிலுள்ள வரையே சலுகை!**





**ஊக்க சக்தி உடனடி: அதற்கே**
**க்ளாக்ஸோஸ்-D®**

dCP/GL/27 tam

# கல்கி
## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களெல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

விரோதிகிருது பங்குனி, 6 — மார்ச் 19, 1972





| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ 23.00 | ரூ 11.50 |
| இதர நாடுகள் | ரூ 50.00 | ரூ 25.00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ 23.00 | ரூ 11.50 |








அழுத பிள்ளை சிரிக்குமாம்...
**அமிர்தாஞ்சன் கிரைப் மிக்ஸ்சர்**

அஜீரணம், வாயு, தூக்கமின்மை, வாந்தி, வயிற்றுப்போக்கு போன்ற குழந்தையின் உடல் கோளாறுகளை விரைவில் குணப்படுத்துகிறது.
பசியைத் தூண்டி, ஜீரணசக்தியைச் சீராக்கி, குழந்தையை ஆரோக்கியத்துடன் கொழுகொழு வென்று வளரச் செய்கிறது.




அமிர்தாஞ்சன் லிமிடெட்

FDSAG1659TM

# ஹெவி டியூடி
# அசோக் லேலண்ட் கோமட்
# உங்கள் தொழிலைப் பெருக்கி
# வருவாயை உயர்த்த
# உதவுகிறது








அதிகப்படியான பளுவை நீண்ட தூரத்திற்கு எடுத்துச்செல்ல ஏற்றவாறு அசோக் லேலண்ட் கோமட் கட்டப்பட்டுள்ளது. உங்களிடம் வரும் அதிகப்படியான தொழிலை இதனால் இழக்க வேண்டிய அவசியமில்லை.

**அதிக சக்தி:** புதிய 110 bhp பவர்-பிளஸ் டீசல் என்ஜின் அதிகப்படி இழுக்கும் சக்தியை அளிக்கிறது.

**அதிக கட்டுபாடு:** இயந்திரத்தினால் இயக்கப்படும் பியூயல் பம்ப் த்ராட்டிலின் எல்லா நிலைகளிலும் என்ஜின் வேகத்தை ஓர் உரிய கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கிறது.

**அதிக பாதுகாப்பு:** பிரத்தியேகமான ஃபுல் ஏர் பிரேக்குகள் வண்டியை உடனடியாக நிறுத்த உதவுவதோடு பயணிகள், ஓட்டுபவர், வண்டி இவற்றிற்கு சிறந்த பாதுகாப்பு அளிப்பதில் ஒரு புதிய தரத்தை ஏற்படுத்தியுள்ளது. அதி நுட்பமாக கட்டப்பெற்ற அசோக் லேலண்ட் கோமட், பியூயல், பராமரிப்பு, இதர செலவினங்களில் ஏற்படும் சிக்கனத்தின் காரணமாக சில மாதங்களுக்குள்ளாகவே ஆரம்பத்திலாகும் தனிச்செலவை ஈடுசெய்து விடுகிறது. ஒவ்வொரு அசோக் லேலண்ட் கோமட் வண்டியுடன் உங்களுக்கு முழுமையான டிவிஎஸ் சர்விஸும் கிடைக்கிறது.

சுலபத்தவணைகளில் பணம் செலுத்துதல், இன்ஷூரன்ஸ், பாடிகட்டுதல், நியாயமான விலையில் மாற்று உறுப்புகள், டயர்கள் ரீடிரெடிங், தேய்ந்த உறுப்புகளை புதுப்பித்தல் போன்ற பலவற்றிற்கும் நம்பகமான சேவை கிடைக்கிறது.

**டி.வி. சுந்தரம் ஐயங்கார் & சன்ஸ் பிரைவேட் லிமிடெட்**
மதுரை - திருச்சி - திருநெல்வேலி - புதுக்கோட்டை - கோயம்புத்தூர் - சேலம் - திருவனந்தபுரம் - எர்ணாகுளம்.

**சுந்தரம் மோட்டார்ஸ்**
(உரிமையாளர்கள்: டி.வி. சுந்தரம் ஐயங்கார் அண்டு சன்ஸ் பிரைவேட் லிமிடெட், மதுரை)
சென்னை - பெங்களூர் - மைசூர்

TVS/6863

கல்கி

மலர் 31

இதழ் 34



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# அஹிம்சைப் போருக்கு ஆயத்தம் செய்க!

பெர்மிட் – லைசென்ஸ் ஆட்சியும், இந்த ஆட்சியை நடத்துவதில் ஸ்ரீமதி இந்திரா காந்தியுடைய கட்சியின் ஏக போக்கியமும் தளராமல் நீடிக்கிற வரையில் இந்தியாவில் உண்மை ஜனநாயகம் ஏற்படும் என்று நம்புவதற்கே இல்லை. ஊழலிலிருந்தும், ஏகாதிபத்தியத்திலிருந்தும் இந்தியாவைக் காக்க வேண்டும் என்று நாம் விரும்பினால், எவ்வாறேனும் பெர்மிட் – லைசென்ஸ் ஏகபோக்கியத்தை அகற்ற வேண்டும்.

நமது மூல அரசியல் சாஸனத்தைப் பார்லிமெண்டின் சாதாரணமான பல சட்டங்களில் ஒன்றாகக் கருதி, அது மக்களுக்குத் தந்திருந்த சுதந்திரங்களை எல்லாம் அழித்துவிட அரசாங்கம் திட்டம் போட்டு வருகிறது. இதைப் பற்றி அந்தரங்க சுத்தமாகச் சிந்தனை செய்து, அபாயத்தை எதிர்த்து நடவடிக்கை எடுப்பதில் மக்கள் முனைய வேண்டும்.

மக்களின் சுதந்திர உரிமைகளைக் காப்பது, பெர்மிட் – லைசென்ஸ் ஆட்சியை அகற்றுவது ஆகிய இரு காரியங்களைச் செய்தாலன்றி விமோசனத்துக்கு வழி இல்லை. தேர்தலின் மூலம் இதைச் செய்ய முடியும் எனத் தோன்றவில்லை. நேரடி நடவடிக்கை மூலமே இந்த ஆபத்தைத் தவிர்க்க இயலும் என்பதைக் காண்கிறேன். நாம் தேர்தல் வழிமுறைகளைச் சார்ந்திராமல், அஹிம்சை மார்க்கத்தில் நேரடியாக நடவடிக்கை எடுக்க முற்பட்டாலன்றி உய்வுக்கு உபாயமில்லை. இந்த நடவடிக்கையில் முதல் அடி வைப்பது யாதெனில், சாஸனத்தைக் காப்பதை முக்கிய கடமையாகக் கொண்ட ஒரே ஒரு கட்சியான சுதந்திரக் கட்சியின் பலத்தை அதிகரிக்க வேண்டும். அக்கட்சிக்குப் பெருவாரியான அங்கத்தினர்களைச் சேர்க்க வேண்டும். தமது ஆட்சி அதிகாரத்தாலும், செல்வாக்காலும் பிரதமரவர்கள் சாஸனத்தைத் தகர்ப்பதில் வெற்றி கண்டு வருவதாகத் தோன்றுகிறது. இந்தத் தோற்றத்தைக் கண்டு நாம் மனத் தளர்ச்சி அடையக் கூடாது. தன்னம்பிக்கை இழக்காமல் சுதந்திரக் கட்சிக்குப் பொதுமக்களின் ஆதரவைத் திரட்டி, அதன் பலத்தைக் கணிசமாக உயர்த்த வேண்டும். சாஸனம் மக்களுக்குத் தருகிற சுதந்திர உரிமைகளைக் காத்துக் கொள்வதன் முக்கியத்துவத்தை மக்களுக்கு உணர்த்த வேண்டும். சாஸனகர்த்தர்கள் வகுத்த சுதந்திர வாழ்வுக்கு மாறாக ஏகாதிபத்தியம் ஏற்படுவதைத் தடுத்து நிறுத்துவதன் அவசியத்தை மக்களுக்குப் புரிய வைக்க வேண்டும். இந்தியாவின் விசேஷமான பணியிலும் அதன் எதிர்கால மேன்மையிலும் நம்பிக்கை கொண்டுள்ள அனைவரும், ஆண்டவன் அருள் செய்வான் என்ற நம்பிக்கை உள்ள அனைவரும், இந்தப் பணியில் குன்றாத ஊக்கத்துடன் தீவிரமாக ஈடுபட வேண்டும். தர்மம் நிறைந்த ஒரு காரியத்தில் பகவானின் கிருபையை நம்பித் தளராத ஊக்கத்துடன் செயலாற்றுவதில் நமக்கு உள்ள ஆற்றலைச் சுதந்திரப் போரில் நிரூபித்துக் காட்டியிருக்கிறோம். காந்திஜியின் தலைமையில் இந்திய மக்கள் கொண்ட எழுச்சியை மீண்டும் நினைவூட்டுகிறேன்.

என் பிரார்த்தனைகளை பகவான் கேட்டு ஈடேற்றுகிறான் என்பதற்குச் சில அறிகுறிகள் காண்கின்றன. ஸ்ரீமதி இந்திரா காந்தி தமது கொள்கையை முற்றிலும் மாற்றிக் கொண்டு ஜனநாயக வழிக்குத் திரும்பினாலும் திரும்பக்கூடும். ஆயினும் பகவானே கிருபை செய்வான் என்று காத்துக் கொண்டிருந்தால் மட்டும் இந்த மாறுதல் ஏற்பட்டு விடாது. நேரடி நடவடிக்கையில் ஸ்ரீமதி இந்திரா காந்திக்கு உள்ள அச்சத்தின் மூலமே அவரது கொள்கைகளில் நாம் விரும்பும் மாறுதலை ஏற்படுத்த முடியும். பிரதமரின் நல்ல திருப்பத்தை விரைவுபடுத்த வேண்டுமாயின், சுதந்திரக் கட்சிக்கு முழுமூச்சுடன் அங்கத்தினர்களைச் சேர்க்க வேண்டும்.

பகவத்கீதை விதிப்பதுபோல், வெற்றி தோல்விகளை எண்ணாமல் நாம் செய்ய வேண்டிய கடமையைச் செய்து, விளைவை பகவான் வசம் விடுவோம்.

நான் முனிவரோ ரிஷியோ அல்ல. நான் பகவானை நம்புகிற ஓர் எளிய

ஜீவன். அவ்வளவுதான். உண்மையைச் சொல்ல விரும்பி என் சொந்த அநுபவத்தைச் சொல்கிறேன்; பிறர் துயரத்தை நான் ஆழமாக உணர்ந்து, அவர்களது துயர் தீருவதற்காகப் பிரார்த்தித்த சமயங்களிலெல்லாம் பகவான் என் வேண்டுகோளைக் கேட்டு நிறைவேற்றுவதைக் கண்டிருக்கிறேன்.

ஆனபடியால் மற்றவர்களுக்கும் நம்பிக்கையோடு சொல்கிறேன்: பிறருக்காகப் பிரார்த்தனை செய்யுங்கள். பகவான் நிச்சயமாக அவர்களது துயரத்தைத் தீர்த்து வைப்பான். உங்களைக் காப்பாற்ற வேண்டும் என்று நீங்கள் கேட்டுக் கொள்ளத் தேவையில்லை. பகவானே உங்களைக் காப்பான். நாம் சுயமாக எதையும் கோராமல், நம் மக்கள் நலனில் மட்டும் உண்மையாகக் கருத்து வைத்துப் பிரார்த்தித்தால் பகவான் நமக்கு உதவி புரிவான். இந்த நம்பிக்கையோடு சுதந்திரக் கட்சிக்கு அங்கத்தினர் சேர்ப்போம். ஏராளமாகச் சேர்க்க வேண்டும் என்பதால் தரத்தைக் கவனியாமலிருக்கக் கூடாது. சேருபவர்களின் தரத்திலும் கவனம் செலுத்திக் கட்சியைப் பலப்படுத்துவோம்.




மிகையான தன்னம்பிக்கை பாம்பு போன்றது. நம்மால் எதையும் செய்துவிட முடியும் என்ற சபலத்துக்கு இடம் தரக்கூடாது. 'அரவம் ஆட்டேல்' என்றான் அவ்வை. இந்தப் பாம்பு நமக்கு வெளியே இல்லை; நம்முடைய சுபாவத்திலேயே கலந்து, நமது விவேகத்தை மேகமூட்டம் போல மறைத்துத் திரிக்கும் பாம்பு. அளவுக்கு மீறிய தன்னம்பிக்கை அவிவேகமாகும்; அதுவே ஒரு பாபமுமாகும். இந்தச் சபல அரவத்தை ஆட்டிப் பாராமல் பணிவுடன் செயல் புரிவோம். பணிவே விவேகத்தின் ஜீவசாரம்; அதுவே எல்லாச் சமயங்களின் உயிர்ச்சத்துமாகும்.




அடிப்படை:
ராஜாஜி ''ஸ்வராஜ்யா''வில் எழுதியது.

# ராஜாஜியின் கருத்துக்கள்

### என் பணி

கப்பல் உடைந்து போனால் உயிர் காக்கும் படகுகளையும் மிதப்புக் கட்டைகளையுமே பிடித்துக் கொள்ள வேண்டும். நம் தேசம் பொருளாதார நிலையில் உடைந்த கப்பலாகவே இருக்கிறது. பகவானுடைய கிருபையே நமக்கு உயிர் காக்கும் படகு. அதைத்தான் பற்றிக் கொள்ள வேண்டும். தேச க்ஷேமத்துக்காகப் பிரார்த்திப்போமாக. பிரார்த்தனை நமது மன அழுக்குகளைப் போக்குகிறது. பகவானின் கிருபைக்கும் நமக்குமிடையே உள்ள தடைகளைப் பிரார்த்தனை அகற்றி விடுகிறது.

சமீபத்தில் நான் கீழே விழுந்து தொடை எலும்பை முறித்துக் கொள்ள விருந்தேன். அதிலிருந்து நான் தப்பியது அதிசயம் என்றே சொல்லலாம். என் பேரன் ராஜ்மோகன் காந்தியின் உறுதி வாக்கையும் நம்பிக்கையையும் ஒப்புக் கொள்ளலாமாயின், இன்னமும் தேசத்துக்கு நான் உபயோகமாயிருக்கக் கூடும் என்ற பகவத் சங்கற்பத்தின் ஓர் அங்கமாகவே நான் தப்பினேன் எனலாம்.

இனி என்னுடைய முயற்சிகளை நான் முக்கியமாகச் செலுத்த விழையும் ஒரே விஷயம், இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே நட்பை வளர்ப்பதுதான். எனக்கு இதைவிடப் பிரியமான பணி வேறில்லை. இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்கும், ஜனநாயக வாழ்முறைக்கும் இதைவிட நலம் பயப்பதும் வேறில்லை. சீன முதலையின் வாயில் தெற்காசியாவின் நீண்ட கால் அகப்படவிருக்கிறது. அமெரிக்காவின் கௌரவத்துக்குத் துரோகம் செய்து சீனத்துடன்குலாவும் அமெரிக்க ஜனாதிபதி, சீன முதலைக்கு மேலும் பலம் தருகிறார்.

எல்லா நலன்களையும் அளிக்கும் பகவானிடம் நாட்டு நலனுக்காக உளமார முறையிடுவதே இன்று நம் பிரார்த்தனை; அதுவே நம் அரசியலும் ஆகும். தமக்குத் தாமே உதவிக் கொள்கிறவர்களுக்குத்தான் பகவானும் உதவி செய்வான் என்பது சத்திய வாக்கு. அச்சத்தையும் த்வேஷச் சிந்தனைகளையும் விடுவோம். பகவானின் கிருபையை அவை தடுக்கும். சுற்றி உள்ள அனைவரிடமும் நட்புப் பாராட்ட வேண்டும் என்பது சமயங்களின் ஆணை; அதுவே நாகரிக சமுதாயத்தின் தேவையும் ஆகும்.

### சரணாகதிக்கு இடம் இல்லை

பிரதமரின் ஆட்சி அதிகாரத்தையும் செல்வாக்கையும் பார்த்துவிட்டு, சுய முன்னேற்றவாதிகள் அனைவரும் சாஸன சுதந்திரங்களைக் காக்கும் பணியைக் கைவிட்டு, பிரதமரது கோஷ்டி கானத்திலேயே சேர விரும்புகிறார்கள். இதில் ஆச்சரியம் இல்லை. ஆயினும் சுதந்திரத்துக்காகவும் மூல சாஸனத்துக்காகவும் ஒரே ஒரு கட்சிதான் போராட வேண்டியிருந்தாலும்—அல்லது ஒரே ஒரு தனி நபர்தான் போராட வேண்டியிருந்தாலும்கூட — இப்போராட்டம் நடந்தேயாக வேண்டும். என்னுடைய வாழ்க்கையில் தீமைக்குச் சரண் புகுவது என்ற பேச்சுக்கு இடமே இல்லை. ஒருகாலும் அதற்கு இணங்க மாட்டேன். இன்று சாஸனத்தைக் காக்கும் பணியைக் கைவிட்டவர்கள் தவறான விருப்பங்களுக்கு இரையாகிவிட்டார்கள். அவர்களே விரைவில் இதன் மடமையை உணர்வார்கள்.

### ராணுவத் தூய்மை நீடிக்குமாக!

அரசியல் தலைவர்கள் எவ்வளவுதான் பெருமையடித்துக் கொண்டாலும் சரி, நம் நாட்டை நன்றாகக் காத்து வருவது ராணுவம்தான்; அரசியல்வாதிகள் அல்ல. நமது தரைப் படை, கப்பற் படை, விமானப் படை ஆகியன மாசுபடாத வரையில் தேசம் பாதுகாப்பாக இருக்கும். தொழிற்சங்கங்களுக்கு ஏற்பட்ட மாசு ராணுவத்துக்கு ஏற்படாமல் இருக்க வேண்டும். அரசியல்வாதிகள் தொழிலாளிகளைக் கருவியாக்கிக் கொண்டு தொழிற்சங்கங்களை இஷ்டப்படி ஆட்டி வைப்பதை நிறைய பார்த்து வருகிறோம். இவ்விதமே ராணுவத்தில் அரசியலை ஊடுருவச் செய்வதற்கு யாரேனும் யத்தனித்தால், அவரைத் தேசத் துரோகி என்றே சொல்ல வேண்டும். இதுவரை நமது ராணுவம் சம்பிரதாய ஒழுக்கங்களை விசுவாசத்துடன் பின்பற்றி வந்துள்ளது. அரசியலால் அது மாசுபடவில்லை. எனினும் முன்னெச்சரிக்கையாக இருப்பதுநல்லது.

# என்ன சேதி?

### ஒரு நல்ல ஆன்மாவின் மறைவு

அரசியலில் இருந்து கொண்டும் ஆழ்ந்த சமயப் பற்றுடன் நல்லவராக வாழ்ந்த திரு கே. வேங்கடசுவாமி நாயுடு அவர்கள் மறைந்து விட்டார்கள். ராஜாஜி மந்திரி சபையில் அறநிலையப் பாதுகாப்பு அமைச்சராக நற்பணி புரிந்தார். ''அவர் எவ்வளவு உதவிகரமாக இருந்தார் என்பதை நான் என்றும் மறவேன்'' என்று ராஜாஜி கூறுகிறார். திரு நாயுடு அவர்கள் சென்னை மேயராக இருந்தபோதுதான் பூண்டி நீர்த்தேக்கம் உருப்பெற்றது. திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் அறங்காவலர்களுள் ஒருவராகச் சேவை புரிந்தார். அடக்கமும் பண்பும் நிறைந்த ஒரு நல்ல ஆன்மா மறைந்தது.

### வயலின் விற்பன்னர் மறைவு

பெருமை பொருந்திய ஒரு பழைய மரபிலே வயலின் வித்வானாக வந்தவர் மதுரை ஸ்ரீ எம். எஸ். சுப்பிரமணிய அய்யரவர்கள். நாற்பதாண்டுகளுக்கு முன்பு அநேக முன்னணி வித்வான்களுக்கெல்லாம் பக்க வாத்தியம் வாசித்து நற்பெயர் எடுத்திருக்கிறார். இவர் ஸ்ரீ ஜி. என். பி.யின் குருமார்களில் ஒருவர். அடையாறு கலாக்ஷேத்திரத்தில் வித்வான்களைப் பயிற்றுவித்தவர். நல்ல உள்ளம் படைத்தவர். இவ்வாண்டு சங்கீத நாடக அகாதெமியின் கௌரவத்தைப் பெறத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்ரீ சுப்பிரமணிய அய்யர் அவர்கள் அந்தப் பரிசினைப் பெறுமுன்பே காலமாகிவிட்டது பரிதாபம்!

அன்புள்ள நண்பன் பாலுவுக்கு, கேசவன் எழுதிக்கொள்வது:

நாம் இருவரும் பொறி இயல் பரீட்சை தேறி ஐந்து வருஷங்களாகியும் இன்னும் வேலையில்லாமல் திண்டாடிக் கொண்டிருக்கிறோம். ஆனால் என்னால் இனியும் வேலையில்லாமல் இருக்க முடியாது. ஆகவே என் மாமனாரிடமிருந்து பணம் கடன் வாங்கிப் பாண்டி பஜாரில் ஒரு ஜவுளிக் கடை ஆரம்பிப்பது என்று தீர்மானம் செய்து விட்டேன். நிறைய காஞ்சீவரம் பட்டுப் புடவைகள், ஆரணியிலிருந்து வரவழைத்து வைத்திருக்கிறேன். ஆனால் நண்பன் என்ற முறையில் என் கடையின் ''போனி''யை நீதான் செய்ய வேண்டுமென்று விரும்புகிறேன். நீ ரூபாய் ஐயாயிரத்துக்காவது பட்டுப் புடவைகள் வாங்கி என் கடையை ஆரம்பித்து வைப்பாய் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆகவே புடவை வாங்க என்று வர முடியும் என்று சொல்லு. அன்று கடையின் ஆரம்ப விழா வைத்துக் கொள்ள ஏற்பாடு செய்கிறேன்.

இப்படிக்கு
உன் நண்பன் கேசவன்

## 2

அன்புள்ள நண்பன் பாலுவுக்கு, நாராயணன் எழுதிக்கொள்வது:

நாம் இருவரும் பொறி இயல் பரீட்சை தேறி ஐந்து வருஷங்களாகியும் இன்னும் வேலையில்லாமல் திண்டாடிக் கொண்டிருக்கிறோம். ஆனால் என்னால் இனியும் வேலை இல்லாமல் இருக்க முடியாது. ஆகவே என் மாமாவிடமிருந்து பணம் கடன் வாங்கிப் பாண்டி பஜாரில் ஒரு வெள்ளிப் பாத்திரக் கடை ஆரம்பிப்பது என்று தீர்மானம் செய்து விட்டேன். பல ஊர்களிலிருந்து அழகிய வேலைப்பாடு அமைந்த வெள்ளிப் பாத்திரங்கள் வாங்கி வைத்திருக்கிறேன். ஆனால் நண்பன் என்கிற முறையில் என் கடையின் ''போனி''யை நீதான் செய்ய வேண்டும் என்று விரும்புகிறேன். நீ ரூபாய் நாலாயிரத்துக்காவது வெள்ளிப் பாத்திரங்கள் வாங்கி என் கடையை ஆரம்பித்து வைப்பாய் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆகவே வெள்ளிப் பாத்திரங்கள் வாங்க என்று வர முடியும் என்று சொல்லு. அன்று கடையின் ஆரம்ப விழா வைத்துக் கொள்ள ஏற்பாடு செய்கிறேன்.

இப்படிக்கு
உன் நண்பன் நாராயணன்

## 3

அன்புள்ள நண்பன் பாலுவுக்கு, மாதவன் எழுதிக் கொள்வது:

நாம் இருவரும் பொறி இயல் பரீட்சை தேறி ஐந்து வருஷங்களாகியும் இன்னும் வேலையில்லாமல் திண்டாடிக் கொண்டிருக்கிறோம். ஆனால் என்னால் இனியும் வேலை இல்லாமல் இருக்க முடியாது. ஆகவே என் சித்தப்பாவிடமிருந்து பணம் கடன் வாங்கிப் பாண்டி பஜாரில் ஓர் எவர்சில்வர் பாத்திரக் கடை ஆரம்பிப்பது என்று தீர்மானம் செய்து விட்டேன். கண்ணைக் கவரும் அழகிய பாத்திரங்களாக அடுக்கி வைத்திருக்கிறேன். ஆனால் நண்பன் என்ற முறையில் என் கடையின் ''போனி''யை நீதான் செய்ய வேண்டுமென்று விரும்புகிறேன். நீ ரூபாய் மூவாயிரத்துக்காவது எவர்சில்வர் பாத்திரங்கள் வாங்கி என் கடையை ஆரம்பித்து வைப்பாய் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆகவே எவர்சில்வர் பாத்திரங்கள் வாங்க என்று வர முடியும் என்று சொல்லு. அன்று கடையின் ஆரம்ப விழாவை வைத்துக் கொள்ள ஏற்பாடு செய்கிறேன்.

இப்படிக்கு
உன் நண்பன் மாதவன்

## 4

அன்புள்ள நண்பன் பாலுவுக்குக் கோவிந்தன் எழுதிக்கொள்வது:

நாம் இருவரும் பொறி இயல் பரீட்சையில் தேறி ஐந்து வருஷங்களாகியும் இன்னும் வேலை கிடைக்காமல் திண்டாடிக் கொண்டிருக்கிறோம். ஆனால் இனியும் என்னால் வேலை இல்லாமல் இருக்க முடியாது. ஆகவே என் தகப்பனாரிடமிருந்தே பணம் கடனாக வாங்கி ஒரு மளிகைக் கடை ஆரம்பிப்பது என்று தீர்மானித்து விட்டேன். நெல்லூரிலிருந்து அரிசி, சாத்தனூரிலிருந்து மிளகாய், பஞ்சாப்பிலிருந்து கோதுமை என்று இப்படி ஒவ்வொரு ஊரிலிருந்தும் சிறந்த பொருள்களை வாங்கி வைத்திருக்கிறேன். ஆனால் நண்பன் என்கிற முறையில் என் கடையின் ''போனி'' நீதான் செய்ய வேண்டும் என்று விரும்புகிறேன். நீ ரூபாய் இரண்டாயிரத்துக்காவது மளிகைச் சாமான்கள் வாங்கி என் கடையை ஆரம்பித்து வைப்பாய் என்று எதிர்பார்த்

துக்கொண்டிருக்கிறேன். ஆகவே மளிகைச் சாமான்கள் வாங்க என்று வர முடியும் என்று சொல்லு. அன்று கடையின் ஆரம்ப விழாவை வைத்துக் கொள்ள ஏற்பாடு செய்கிறேன்.

இப்படிக்கு
உன் நண்பன் கோவிந்தன்

**5**

அன்புள்ள நண்பர்களான கேசவன், நாராயணன், யாதவன், கோவிந்தன் ஆகிய நால்வருக்கும் பாலு எழுதிக்கொள்வது:

நீங்கள் எழுதிய கடிதங்கள் கிடைத்தன. உங்களுக்கு எப்படியாவது உதவி செய்துதான் ஆகவேண்டும் என்று தீர்மானித்து விட்டேன். ஆகவே இத்தனை நாட்களும் வேண்டாம், வேண்டாம் என்று ஒதுக்கித் தள்ளிய ஒரு காரியத்தைச் செய்துதான் தீர்வது என்று தீர்மானித்து விட்டேன். அதாவது வெகு நாட்களாகவே என் அம்மா எனக்காக நிச்சயம் செய்துவைத்திருக்கும் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வது என்று தீர்மானித்து விட்டேன். ஆகவே வருகிற முதல் தேதி நீங்கள் எல்லோரும் கடைத் திறப்பு விழாவை வைத்துக் கொள்ளலாம். நான் என் எதிர்கால மாமனாரோடு அங்கு வந்து அவரை நீங்கள் சொன்ன தொகைக்குச் சாமான்கள் வாங்கச் சொல்கிறேன்.

திருமண அழைப்புக் கடிதமும் இத்துடன் உள்ளது.

இப்படிக்கு
உங்கள் நண்பன் பாலு

<u>அட்டைப்பட விளக்கம்</u>

# பல்கலைகளில் தேர்ந்த மெல்லியலார்கள்

ஒரு ஞாயிற்றுக்கிழமை முற்பகல் முழுவதும் மியூசிக்அகாதெமி அரங்கில், மேல்நாட்டு மெல்லிசையும், வடநாட்டுத் திரைப்பட மெல்லிசையும் பாடிக் குழுமியிருந்த அனைவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்திய அனிதா ரத்னமும், பீனா ரத்னமும் இரண்டு ரத்தினங்களாகவே மதிக்கத் தகுந்தவர்கள். ஏனெனில், மேல்நாட்டு மெல்லிசையுடன், கர்நாடக சங்கீதத்தையும் கச்சேரி செய்யும் அளவுக்குப் பயின்றுள்ள இவ்விரு சகோதரிகளும் பரதநாட்டியமும் அழகாக ஆடுகிறார்கள். மோகினி ஆட்டமும் தெரியும். கல்லூரியில் பட்டப் படிப்பும் படித்துக் கொண்டிருப்பவர்கள். கல்லூரி நிகழ்ச்சிகளிலும் பங்கு பெற்று சக மாணவிகளின் அன்பையும், ஆசிரியர்களின் ஆசியையும் பெற்றுள்ளவர்கள்.

டி.வி.எஸ். என்ற மூன்றெழுத்துக்கள் தொழில் உலகத்தில் நன்கு அறிமுகமான எழுத்துக்கள். சென்னை ஷெரீஃபாக 1971ம் ஆண்டில் கௌரவப் பதவி வகித்த திரு ரத்னமும் சென்னை நகருக்கு அறிமுகமானவரே. அவர் புதல்விகள்தாம் இவ்விரு ரத்னங்களும்.

உலகில் சிறந்த மெல்லிசை (Pop music) பாட்டு ரிகார்டுகளை வரவழைத்துப் போட்டுக் கேட்டு மெல்லிசை பாடும் திறமையை வேகமாக வளர்த்துக் கொண்டுவிட்டார் அனிதா. இதற்கு இன்றியமையாத கிட்டார் வாத்தியத்தையும் முறைப்படி பயின்று அதை வாசித்துக் கொண்டே பாடிப் பழகிக் கொண்டிருக்கிறார். பாடுபவருக்கு உள்ள உற்சாகத்தைச் சபையினருக்கும் பரப்பி, ரசிகர்களையும் நிகழ்ச்சியில் ஈடுபட வைத்து உல்லாசச் சூழ்நிலையை உண்டாக்கக் கூடிய சக்தி மேல்நாட்டு மெல்லிசைக்கு உண்டு. இந்த ரசானுபவத்தைப் பூரணமாக வழங்கக்கூடிய திறமை அனிதா சகோதரிகளுக்கு இருக்கிறது. ஹிந்திப் பாட்டுக்கள் சினிமாவிலிருந்தே எடுக்கப்பட்டவை. அனிதா சகோதரிகளின் சினிமாப் பாட்டுக்கள் மெல்லிசை ரசிகர்களுக்கு உற்சாகமூட்டுவனவாக இருந்தன.

இவ்வளவு அபூர்வமான திறமையை நம் நாட்டுப் பாட்டிலும் கலையிலும் செலவழிக்கக் கூடாதா என்று எண்ணத் தோன்றும். அந்தக் குறையை இவ்விரு ரத்னங்களும் விட்டு வைக்கவில்லை. வித்வான் மதுரை என். கிருஷ்ணனிடம் முறைப்படி கர்நாடக சங்கீதம் பயின்றவர்கள் இவ்விருவரும். சுமார் இருபத்தைந்து வர்ணங்களும், நூற்றுக்கு மேற்பட்ட சங்கீத மும்மூர்த்திகளின் 'கிருதி'களும் பாடாந்தரம் உண்டு. அடையாறு லக்ஷ்மணனிடம் முறைப்படி பரதநாட்டியம் பயின்றவர்கள். திருச்சூர் ராமநாதனிடம் மோகினி ஆட்டம் போன்ற கேரள நாட்டுக் கலைகளைக் கற்றவர்கள். இத்துறையில் இன்னமும் பயிற்சிகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

பயிற்சியுடன் நின்றுவிடவில்லை. பயின்றதை ஆடிக் காட்டியும், பாடிக் காட்டியும் 'சபாஷ்' பெற்றுள்ளார்கள் இவ்விருவரும். நாட்டிய நிகழ்ச்சிகள் மதுரையிலும், சென்னையிலும் பல அரங்கங்களில் நடைபெற்றுள்ளன. ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஆசிரம நிதிக்காக பெங்களூர் டவுன் ஹாலில் இரண்டு ஆண்டுகளுக்குமுன் நிகழ்ந்த பரதநாட்டிய நிகழ்ச்சியும், சென்னை ராஜ்பவனில் ஸர்தார் உஜ்ஜல்சிங் மாநில கவர்னராக இருந்து விலகும்போது செஞ்சிலுவைச் சங்க நிதிக்காக நிகழ்த்திய மெல்லிசைக் கச்சேரியும் குறிப்பாகச் சொல்ல வேண்டிய நிகழ்ச்சிகளாகும். இவ்விரு சகோதரிகளின் கலைத் தேர்ச்சிகளுக்குக் காரணமான இவர்களது அன்னை ஸ்ரீமதி ரத்னத்தைப் பாராட்ட வேண்டும்.

யுனெஸ்கோ, சர்வதேசக் கல்வி ஆண்டு 1970க்கு அனிதாவுக்கு அளித்த பாராட்டுப் பத்திரத்தில் "கல்லூரிப் படிப்பிலும் விஞ்ஞானத்திலும், சாஸ்திரீய நடனங்களிலும், விளையாட்டுக்களிலும் சிறந்த மாணவி" என்று கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு பல வகைகளில் திறமையுடைய இவ்விரு சகோதரிகளின் புகைப்படங்களை இவ்விதழ் மேலட்டையில் வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகிறோம்.




நான்கு சட்டைகள்
அல்லது இரண்டு
சேலைகள் பனிபோல்
வெண்மை பெறுகின்றன.
செலவு
ஒரே ஒரு காசுதான்!






ULKA-GMH-4 TAM

# மாக்ஸிம்

கடைசி அலசலுக்கு முன் நீரில் 10—15 துளிகள் மாக்ஸிம் கலக்கவும். அதில் துணிகளை 15 நிமிடம் ஊற வைக்கவும். பிறகு பிழியாமல் அப்படியே உலர விடவும்.

# எது சுயராஜ்யம்?

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

சுதேசி, சுயராஜ்யம் என்று இப்பொழுது எல்லோரும் சொல்கிறார்கள். ஆனால் நடை, உடை, பாவனை எல்லாவற்றிலும் வெள்ளைக்காரன் மாதிரி இருக்க வேண்டும் என்று முயற்சி செய்கிறார்கள். இவைகளெல்லாம் உள்ளமட்டும் நாம் பரதேசிகள்தான். நம் நாடு பரராஜ்யம்தான். வாஸ்தவமான சுயராஜ்யம் வரவேண்டுமென்றால் நம்முடைய தேசத்தில் ஆசார அநுஷ்டானங்கள் எப்படி இருந்தன என்பதைக் கவனித்து இப்பொழுது இருப்பதை அப்படி மாற்றினால் நல்லது என்று உணர்ந்து அதற்கு வேண்டிய காரியங்களைச் செய்வதுதான். நம்முடைய தேசத்துப் பழைய வழக்கங்கள், தர்மங்கள், ஆத்ம சம்பத்துக்கள் மாறாமல் இருக்க வேண்டும். பிற தேசத்தார்கள் மாதிரி நாம் இருக்க வேண்டும் என்று சொல்லுகிறது தப்பு. வெளிநாட்டார் சொல்லாமலே நாமே அவர்களுடைய பழக்கங்களுக்கு அடிமையாகி விட்டோம். பழக்க வழக்கங்களில் நாம் அவர்களுக்கு அடிமையாகிவிட்ட பின் அரசியலில் மட்டும் அடிமைத்தனம் இருந்தென்ன, போயென்ன?

உண்மையான சுயராஜ்யமானால், நம்முடைய சுதந்திரப்படி நடத்தும் சட்டசபைகளில் நம்முடைய தர்ம ராஜ்யம் ஆதியில் எப்படி இருந்தது, அதை மீண்டும் கொண்டு வர என்ன செய்ய வேண்டுமென்பதை ஆலோசிக்க வேண்டும். நாம் நாமாக இருக்க வேண்டும். எவ்வளவு பலம் நமக்கு உண்டோ அவ்வளவையும் நம்மை நாமாக்குவதில் உபயோகப்படுத்த வேண்டும். வெள்ளைக்கார வேஷத்திலே உள்ள நம்மவர்கள்தான் சட்டம் செய்கிறார்கள். அதற்கு அடிமையாக நாம் இருக்கிறோம். நம்முடைய சம்பிரதாயங்களை தெரியாமல் வெள்ளைக்கார சம்பிரதாயங்களை அநுசரிப்பவர்களுக்கு வோட்டுக் கொடுத்து வரும் ராஜ்யம் அடிமை ராஜ்யம்தான். முன்பு எந்த முறை இருந்ததோ அந்த முறைதான் நம்முடையது. அதன்படி இருந்தால் உத்க்ருஷ்டத்தை அடையலாம் என்பது அறிந்து, நமக்கு எந்த மாதிரி ஸ்வதந்திரம் உண்டோ அதை, அந்த முறையை நிலைநிறுத்துவதில் விநியோகப் படுத்த வேண்டும். தர்மம், தொழில் முறை முதலியவைகளை அறிந்தவர்களையும், அநுஷ்டானம், ஒழுக்கம் உடையவர்களையும் ராஜ்ய நிர்வாகத்தில் வைத்துப் பார்க்க வேண்டும். அவர்கள் நம்முடைய தர்ம ராஜ்யத்தை ஸ்தாபித்து இது நன்றாக நடக்கிறது என்று காட்டி மற்றவர்களும் இதை அநுசரிக்கச் செய்ய வேண்டும். அப்படி நடத்திக் காட்டுவதற்கு நம்முடைய சாஸ்திரங்களையெல்லாம் தெரிந்துகொள்ள வேண்டும். வழிகாட்டும் புஸ்தகங்கள் பல இருக்கின்றன. இவை இருப்பதால்தான் நானும் இதையெல்லாம் சொல்ல முடிகிறது. இல்லாவிட்டால் எல்லாம் மறந்து போயிருக்கும். அவைகளைப் பார்த்து அந்தப்படி ஏன் நடக்கக்கூடாது, அந்தப்படி பண்ணுகிறவர்களை ஏன் சட்டசபைக்கு அனுப்பக்கூடாது என்று ஆலோசித்துப் பாருங்கள். நமக்குக் கொடுக்கப்படும் சுதந்திரத்தை இவ்விதம் பிரயோஜனப்படுத்தி, லோகத்தில் தர்மத்தை நடத்திக் காட்டி மற்றவர்களுக்கும் வழிகாட்டிப் பரமேசுவரனுடைய அநுக்ரஹத்தைப் பெற வேண்டும்.





விக்கோ டெர்மரிக் வானிஷிங் கிரீமைத்
தடவியவுடன் நூறு சதவிகிதமும்
இயற்கையாக எண்ணெய்ப்பசை
மாறுகிறது. இதில் மஞ்சள் சுத்த
மான சந்தன எண்ணெயுடன் கலக்கப்
பட்டிருக்கிறது. பண்டைக் காலமுத
லாகவே கிருமிநாசினியும், துவர்ஜி
அழிப்பு சாதனமுமான மஞ்சள் எழிலை ஒளிரச்
செய்ய உபயோகிக்கப்பட்டுவருகிறது. அது
தேவையற்ற பொடி ரோமம் வளர்வதைத் தடை
செய்கிறது. மஞ்சளின் இத்தன்மைகள் பண்
டையகாலம் முதல் அறியப்பட்டவையே!
கிருமி நாசினியான இந்தக்கிரீம் முக அழகைத்
திருப் பின் ஏற்படும் புண், வெட்டுக்காயங்
களைக் குணப்படுத்துகிறது. முகச் சருமத்தில்
சோப்பினால் ஏற்படும் கெட்ட விளைவுகளை
அகற்ற உதவுகிறது.

## எழிலுக்கு இயற்கையானவழி...

## விக்கோ டெர்மரிக்

வானிஷிங் கிரீம்







மேனி எழிலை அதிகப்படுத்திப்
பாதுகாக்க மென்மையும் குளுமையும்
கொண்ட விக்கோ ஸ்நோவும் இருக்
கிறது. இதில் "விட்ச்ஹேஸல்"
(Witch Hazel) என்ற புகழ் பெற்ற
சருமத்தைலம் அடங்கியுள்ளது.



**விக்கோ லாபரெட்டரீஸ்**

தாதர், பம்பாய் 14

TML




## 18. மூன்று நண்பர்கள்

தேவபட்டணத்தின் தேரோடும் மாடவீதியில் எதிர் எதிராக இரண்டு மச்சுவீடுகள் இருந்தன. இரண்டு வீடுகளிலும் வாசல் தாழ்வாரத்துக்கு இரும்புக் கம்பியினால் அடைப்புப் போடப்பட்டிருந்தது. இரண்டு வீட்டு வாசற்புறத்திலும் ஒவ்வொரு போர்டு தொங்கிற்று. ஒரு போர்டில் ''ஆர். ஆத்மநாதய்யர், பி.ஏ.,பி.எல்., அட்வகேட்'' என்றும் இன்னொரு போர்டில் ''என். தாமோதரம் பிள்ளை, பி.ஏ., பி.எல்., அட்வகேட்'' என்றும் எழுதியிருந்தது.

ஆத்மநாதய்யரும் தாமோதரம் பிள்ளையும் நெடுநாளைய சிநேகிதர்கள். தேவபட்டணத்தில் பெரிய வக்கீல்கள். இருவரும் பெரிய குடும்பிகள்; நல்ல சம்பாத்தியம் உள்ளவர்கள். ஆனாலும் பெரிய வீடு கட்டிக் கொஞ்சம் கடன் பட்டிருந்தார்கள்.

இரண்டு வருஷங்களுக்கு முன்னால் அவர்களுடைய அந்தஸ்தில் கொஞ்சம் வித்தியாசம் ஏற்பட்டிருந்தது. 'பப்ளிக் பிராஸிக்யூட்டர்' பதவிக்கு இருவரும் பிரயத்தனம் செய்தார்கள். ஒருவருக்கொருவர் தெரிந்துதான் பிரயத்தனம் செய்தார்கள். ''தாமோதரம்-பிள்ளைக்கு எந்தக் காரணத்தினாலாவது கொடுக்காவிட்டால் எனக்குக் கொடுங்கள்'' என்று ஆத்மநாதய்யர் கேட்டார். ''ஆத்மநாதய்யருக்கு ஒருவேளை கொடுக்காவிட்டால் எனக்குக் கொடுங்கள்'' என்று தாமோதரம் பிள்ளை சொன்னார். ஊரில் இன்னும் பல வக்கீல்களும் தத்தமக்குப் பதவிக்காகப் பிரயத்தனம் செய்தார்கள். கடைசியில் ஸ்ரீ தாமோதரம் பிள்ளைக்கு 'பப்ளிக் பிராஸிக்யூடர்' வேலை கிடைத்தது. இதைக் குறித்து அபார சந்தோஷமடைந்து முதன் முதலில் ஸ்ரீ தாமோதரம் பிள்ளைக்கு 'பார்ட்டி' கொடுத்தவர் ஸ்ரீ ஆத்மநாதய்யர்.

சந்தோஷம் ஒருபுறம் இருந்தபோதிலும் ஆத்மநாதய்யரின் மனத்தில், ''நம்முடன் இவ்வளவு சிநேகமாக இருந்த மனிதர் இந்த ஒரு விஷயத்தில் நமக்கு விட்டுக் கொடுக்கவில்லை பார்த்தாயா?'' என்ற எண்ணம் இருந்தது. தாமோதரம் பிள்ளையின் மனத்திலோ, ''நம்முடன் இவ்வளவு சிநேகமாயிருந்த மனிதர் கடைசியில் நம்மோடு போட்டி போட முன்வந்தார் அல்லவா?'' என்ற

எண்ணம் இருந்தது. இம்மாதிரி எண்ணத்தை இருவரும் தங்கள் மனத்தில் வைத்துக்கொண்டு மற்றபடி மூன்மாதிரி சிநேகமாகப் பழகி வந்தார்கள்.

ஆனால் பழைய தலைமுறையைச் சேர்ந்த வயதான இந்த மனிதர்களைப் பற்றி நமக்கு இப்போது என்ன கவலை? இளந் தலைமுறையைச் சேர்ந்தவர்களைக் கவனிக்கலாம்.

**தா**மோதரம் பிள்ளை வீட்டின் மூன்றாவது மச்சில் ஒரு நாள் முன்னிரவில்



நிலா வெளிச்சத்தில் உட்கார்ந்து மூன்று வாலிபர்கள் உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவன் தாமோதரம் பிள்ளையின் மூத்த குமாரனான அமரநாதன். இன்னொருவன் ஆத்மநாதய்யரின் சிமந்த புத்திரனான பட்டாபிராமன். மூன்றாவது வாலிபன் நமது ராஜம்பேட்டை கிட்டாவய்யரின் திருக் குமாரன் சூரிய நாராயணன்.

முதல் இருவரும் இந்த வருஷத்தில் பி. ஏ. பரீட்சை எழுதுவதற்குப் படித்துக் கொண்டிருந்தார்கள். இருவரும் வயது இருபது ஆனவர்கள்.

சூரிய் நாராயணன் அவர்களுக்கு இரண்டு' வயது சின்னவன். ஆனாலும் எஸ். எஸ். எல். சி. பரீட்சைக்குத்தான் படித்துக் கொண்டிருந்தான். ஏனெனில், கொஞ்சம் வயதான பிறகே அவனை ஹைஸ்கூல் படிப்புக்காகக் கிட்டாவய்யர் தேவபட்டணத்துக்கு அனுப்பினார்.

ஆத்மநாதய்யர் கிட்டாவய்யரின் வக்கீல்; நெடு நாளைய சிநேகிதர். ஆகையால் பையனைக் கொஞ்சம் கவனித்துக் கொள்ளும்படி அவரிடம் கிட்டாவய்யர் சொல்லி யிருந்தார். சூரியநாராயணன் ஹோட்டலில் சாப்பிட்டான். படிப்பதற்கு வசதியாக இருக்கும் என்று ஆத்மநாதய்யர் வீட்டில் ஜாகை வைத்துக் கொண்டிருந்தான்.

''அமர்நாத்! நம்ம சூரியா நாளைக்கு ஊருக்குப் போகிறான். தெரியுமோ இல்லையோ?'' என்றான் பட்டாபி.

''அப்படியா? இப்போது ஊரில் என்ன விசேஷம்? பரீட்சை நெருங்கி விட்டதே!'' என்றான் அமர்நாத்.

''மதராஸிலிருந்து யாரோ பெண் பார்க்க வருகிறார்களாம்; அதற்காக என்னை வந்து விட்டுப் போகும்படி அப்பா கடிதம் எழுதி யிருக்கிறார்'' என்றான் சூரியா.

''யாரோ பெண் பார்க்க வந்தால் உனக்கு என்னடா வந்தது? நீ பெண்ணா? அல்லது யாரோவா?'' என்றான் அமரநாதன்.

''ஏன் இப்படிக் கேட்கிறாய்? இவனுடைய தங்கைக்குக் கல்யாணம் நிச்சயம் ஆகிறதா யிருந்தால் இவன் அங்கே இருக்க வேண்டாமா?'' என்றான் பட்டாபிராமன்.

''யார் சூரியாவின் தங்கை லலிதாவுக்கா கல்யாணம்? அவளைப் பார்ப்பதற்காகவா மதராஸ்காரன் வருகிறான்? அழகாயிருக்கிறதே! ஏனப்பா பட்டாபி! சூரியாவின் தங்கையை நீ கட்டிக் கொள்ளப் போகிறாய் என்றல்லவா எண்ணியிருந்தேன்...?''

''சீ! சீ! என்ன இப்படி உளறுகிறாய்? அதுவும் சூரியாவைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு?''

''உளறல் என்னடா உளறல்? உண்மையைச் சொன்னால் உளறலா? சூரியாவைத்தான் கேட்கிறேனே? எனக்கு என்ன பயம்? ஏண்டா, சூரியா! நம்ம பட்டாபிராமன் தினம் பொழுது விடிந்தால் லலிதாவைப் பற்றியே எண்ணி எண்ணி உருகிக் கொண்டிருக்கிறானே! — அப்படியிருக்கும்போது லலிதாவைப் பார்க்க மதராஸிலிருந்து ஒருவன் வருவானேன்?''. என்றான் அமரநாத்.

''அதெல்லாம் எனக்கென்ன தெரியும், ஸார்! என்னைக் கேட்டுக் கொண்டா ஏற்பாடு செய்கிறார்கள்? ஒரு வேளை பட்டாபிக்கு ஜாதகப் பொருத்தம் சரியில்லையோ என்னமோ?'' என்றான் சூரியா.

''ஜாதகம் பார்க்கிறது, கிரகம் பார்க்கிறது என்றெல்லாம் வைத்துக் கொண்டிருப்பதால்தான் நம்முடைய தேசம் பாழாய்ப் போகிறது. நடக்கிற கல்யாணம் எல்லாம் ஜாதகம்



பார்த்துத்தான் செய்கிறார்கள். ஆனாலும் கல்யாணத்துக்குப் பிறகு நடப்பதென்ன? 100க்கு 90 தம்பதிகளின் இல்வாழ்க்கை நரகமாக இருக்கிறது. எத்தனையோ பெண்கள் கல்யாணமாகி ஒரு வருஷத்துக்குள்ளே விதவைகளாகித் தொலைக்கிறார்கள். விதவைகளோடு நிற்கிறார்களா? எத்தனையோ காரியங்களுக்கு அபசகுனமாக எதிரே வந்து காரியங்களைக் குட்டிச்சுவராக்குகிறார்கள். இந்தத் தேசத்திலே உள்ள ஜாதகங்களையெல்லாம் திரட்டித் தீயிலே போட்டுப் பொசுக்கினால் எவ்வளவோ நன்மையுண்டு!'' என்று ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தான் அமரநாத்.

''எல்லாம் வாய்ப் பேச்சுத்தான்.. உன் தகப்பனார் கூடப் பெரிய 'சூனுமானு' மாதிரிதான் பேசுகிறார். ஆனால் போன வருஷம் உன் சகோதரியின் கல்யாணம் நடந்ததே, பிராமணப் புரோகிதரைக் கூப்பிட்டுத்தானே நடத்தினார்? அப்புறம், 'ஜோஸ்யத்தில் எனக்கு நம்பிக்கையே யில்லை; சுத்த பிராடு!' என்று சொல்லிக் கொண்டிருந்தவர் பப்ளிக் பிராஸிக்யூடர் வேலை கிடைக்குமா கிடைக்காதா என்ற சந்தேகம் ஏற்பட்டதும், சப்தரிஷி வாக்கியம் என்னும் ஏட்டுச் சுவடி வலையில் விழுந்து விட்டாரா இல்லையா?''

''பட்டாபி! இது என்ன வாதத்தில் சேர்ந்தது? என் அப்பா செய்யும் காரியங்களுக் கெல்லாம் நான் ஜவாப்தாரியா?'' என்றான் அமரநாத்.

''ரொம்ப சரி! அது போலவே சூரியா தங்கையின் கல்யாணத்துக்கும் ஜாதகத் தடைக்கும் சம்பந்தம் இல்லை. என்னுடைய ஜாதகத்தைக் கேட்கவும் இல்லை; பார்க்கவும் இல்லை. கல்யாண விஷயத்தில் என்னுடைய திடமான கொள்கை உனக்குத் தெரியாதா? பி.ஏ. பாஸ் செய்து விட்டுக் குறைந்தபட்சம் மாதம் இருநூறு ரூபாய் சொந்தத்தில் சம்பாதிக்கும் நிலைமை ஏற்பட்ட பிறகுதான் நான் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறேன் என்று எத்தனையோ தடவை சொல்லி யிருக்கிறேனே?''

''அடே, இந்தக் கதை யெல்லாம் யாரிடம் அளக்கிறாய்? சென்ற வருஷத்தில் கிட்டாவய்யரும் அவருடைய குமாரியும் உன் வீட்டுக்கு வந்து ஒரு வாரம் தங்கியிருந்தபோது நீ என்ன பாடு பட்டாய் என்று எனக்குத் தெரியாதா? உன் வீட்டின் உள்ளேயிருந்து வெளியிலும் வெளியிலிருந்து உள்ளேயும் குட்டி போட்ட பூனைபோல் நிமிஷத்துக்கு ஒரு தடவை போய் வந்துகொண்டிருந்தாயே? அதை யெல்லாம் நான் மறந்து விட்டேன் என்றா நினைக்கிறாய்?''

''அமரநாத்! உன்னிடம் நான் இந்தப் பேச்சை எடுத்ததே தப்பு. சொன்னதை யெல்லாம் வாபஸ் வாங்கிக் கொள்கிறேன்.''

''அதெல்லாம் முடியாது அப்பா, முடியாது. கோர்ட்டில் கேஸ் தாக்கல் செய்து விட்டால் அப்புறம் வாதியின் இஷ்டம் போல் வழக்கை வாபஸ் பெற முடியுமா? பிரதிவாதியும், கோர்ட்டாரும் சம்மதித்தால்தானே முடியும்? நான் கேஸை வாபஸ் கொடுக்கச் சம்மதிக்கவில்லை, பட்டாபி! லலிதாவைப் பற்றி நீ அந்த நாளில் வர்ணனை செய்ததெல்லாம் எனக்கு நினைவில் இல்லை என்றா நினைக்கிறாய்? கம்பனும் காளிதாஸனும் வெட்கிப் போகும்படி வர்ணனை செய்தாயே? ஒரு கவிகூடப் பாடியது எனக்கு நினைவிருக்கிறதே! 'ஒரு நாள் குமுத மலர்கள் நிறைந்திருந்த குளக்கரையோரமாக லலிதா சென்றாள். கூம்பி யிருந்த குமுத மலர்கள் எல்லாம் கலீரென்று சிரிப்பது போல் மடலவிழ்ந்து மலர்ந்தன. லலிதாவின் சௌந்தரிய வதனத்தை அந்தக் குமுதங்கள் பூரணச் சந்திரன் என்று நினைத்துக் கொண்டு விட்டதுதான் காரணம்!' என்று நீ ஒரு கவி பாடவில்லையா? நிஜமாகச் சொல்லு!''

''அப்பா! அமரநாத்! போதும், இத்துடன் நிறுத்து. வீணாக என் மானத்தை வாங்காதே. உன் பரிகாசப் பேச்சைப் பற்றிச் சூரியா ஏதாவது தப்பாக நினைத்துக் கொள்ளப் போகிறான்!'' என்று பட்டாபிராமன் பெரிதும் சங்கடப்பட்டுக் கொண்டே சொன்னான்.

''தப்பாக நினைத்துக் கொண்டால் நினைத்துக் கொள்ளட்டும். நினைத்துக் கொண்டு என் தலையையா வாங்கி விடப் போகிறான்? அப்படி வாங்குவதாயிருந்தாலும் நான் உண்மையைத்தான் சொல்லுவேன். சூரியா! இருந்தாலும் உன் அப்பா செய்கிற காரியம் கொஞ்சமும் நன்றாக இல்லை. நம்ம பட்டாபிராமன் இருக்கும்போது உன் அப்பா எதற்காக வேறு வரன் தேட வேண்டும்? இவனுக்கு என்ன குறைவு?''

இத்தனை நேரமும் முகச் சிணுக்கத்துடன் கேட்டுக் கொண்டிருந்த சூரியா இப்போது, ''நானும் உண்மையைச் சொல்லி விடட்டுமா? எனக்கும் அப்பாவின் ஏற்பாடுபிடிக்கவில்லை. லலிதாவைப் பட்டாபிராமனுக்குக் கொடுக்க வேண்டும் என்பதுதான் என்னுடைய விருப்பம். லலிதாவுக்கும் அதுதான் சந்தோஷமாக இருக்கும். யாரோ முன்பின் தெரியாத ஆசாமியின் கழுத்தில் லலிதாவைக் கட்டுவதற்கு ஏன் முயற்சி செய்கிறார்

# நீங்கள்...

தன்னம்பிக்கையுடன்,
உங்களுக்கே உரிய தனிப்
புதுமைத் தோற்றத்துடன் திகழ

# ஹகோபா

எம்ப்ராய்டர்ட் துணிவகைகள்

ஹகோபா, இவர்கள் தயாரிக்கும் எம்ப்ராய்டர்ட் துணிவகைகள் மற்றும் எம்ப்ராய்டர்ட் லேஸ்களுக்கான பதிவுபெற்ற வியாபாரச் சின்னமாகும்: ∴பேன்ஸீ கார்ப்பொரேஷன் லிமிடெட், 16, அப்போலோ ஸ்ட்ரீட், பம்பாய்-1

*Ratan Batra/FC/Tam/361*

# அருமையான சுவை என்பது

## ஒரு விஷயம், சக்திமிக்க போஷாக்கு

# என்பது மற்றொரு முக்கியமான விஷயம்

அந்தப் போஷாக்கைப் பெறுவதற்குத்தான் எவ்வளவு சுகமான, சுவைமிக்க வழி! பார்லே க்ளுகோ பிஸ்கெட்டுகளில் பால், கோதுமை மற்றும் சர்க்கரையின் நல்ல அம்சங்கள் எல்லாம் நிரம்பியுள்ளன — புரதங்களும் வைட்டமின்களும் அபரிமிதமாக அடங்கியுள்ளன.




**பார்லே க்ளுகோ** பிஸ்கெட்டுகள்

குழந்தைகளுக்கு விசேஷமாக சிறந்து விளங்குகின்றன

இந்தியாவின்
மிக அதிகமாக
விற்பனையாகும்
பிஸ்கெட்டுகள்

everest/7e/PP Tam

களோ தெரியவில்லை. உண்மையிலேயே எனக்கு அது பிடிக்கவில்லை'' என்றான்.

''நான் ஒருவன் இருக்கிறேன், என் விருப்பத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற யோசனையே இல்லாமல் இரண்டு பேரும் பேசுகிறீர்களே! லலிதா விஷயமாக எனக்கு அத்தகைய எண்ணம் கிடையவே கிடையாது. ஆனால் ஒன்று மட்டும் சொல்வேன். யாரோ ஒரு முன்பின் தெரியாத மனிதன் வருவது — பெண்ணை அவன் முன்னால் கொண்டு நிறுத்துவது — அவன் சாமுத்திரிகா லட்சணம் எல்லாம் சரியாயிருக்கிறதா என்று பார்ப்பது — அப்புறம் பெண் பிடிக்கவில்லை என்று சொல்வது — இவையெல்லாம் மிகப் பிசகான காரியங்கள். இதே மாதிரி 'வேண்டும் அல்லது வேண்டாம்' என்று சொல்கிற உரிமை பெண்ணுக்கும் இருந்தால் பாதகமில்லை! ஆனால் பெண்ணுக்கோ வருகிறவன் முகத்தை ஏறெடுத்துப் பார்க்கவும் தைரியம் கிடையாது...''

''அதென்னப்பா, அப்படிச் சொல்கிறாய்? பெண் பார்க்க வந்தவனைத் தங்களுக்குப் பிடிக்கவில்லை என்று எத்தனையோ பெண்கள் சொல்லித்தான் இருக்கிறார்கள். அதனால் எத்தனையோ பல கல்யாணங்கள் நின்றும் போயிருக்கின்றன.''

''அப்படியெல்லாம் கதைகளிலே நடந்திருக்கலாம். உண்மை வாழ்க்கையிலே நடப்பதில்லை.''

''இதுவரை நடந்திருக்கிறதோ, இல்லையோ, இப்போது அப்படிச் செய்தாலென்ன என்றுதான் கேட்கிறேன். சூரியா! நான் சொல்கிறதைக் கேள். நீ உன் தங்கையிடம் சொல்லி, வந்து பார்க்கிறவனை, 'எனக்குப் பிடிக்கவில்லை' என்று சொல்லப் பண்ணிவிடு!'' என்றான் அமரநாத்.

''அப்படியெல்லாம் செய்யாதே, சூரியா! லலிதா விஷயத்தில் என்னுடைய மனத்தைத் தவறாக அறிந்து கொண்டு அமரநாதன் சொல்லுகிறான். ஒரு மரத்திலே ஓர் அழகான புஷ்பம் மலர்கிறது. 'அது அழகாயிருக்கிறது; கண்ணுக்கினிய காட்சியாயிருக்கிறது' என்று ஒருவன் சொன்னால், அதை உடனே அவனுக்கே சொந்தமாக்கிக் கொள்ள வேண்டும் என்று அர்த்தமா? சிலர் அப்படிப்பட்ட ஆசை கொண்டவர்களாயிருக்கலாம். ஆனால் என்னுடைய கருத்து அதுவல்ல. மரத்திலே பூத்திருக்கும் புஷ்பத்தைப் பார்த்தே நான் சந்தோஷப்படத் தயார். யாராவது அந்த மலரைப் பறித்துத் தலையில் வைத்துக் கொண்டாலும் என்னால் பார்த்துச் சந்தோஷப்பட முடியும்!''

''நீ சொல்வது சுத்த ஹம்பக்! அப்படி அழகான மலரை மரத்திலேயே விட்டு வைக்கத் தயாராக உள்ள மானிடர் வெகு அபூர்வம். அதுமட்டுமல்ல; மலரைப் பறித்துத் தலையில் சூடிக் கொள்வதாயிருந்தால் அதற்குத் தகுதியானவர்களின் தலையில் சூட்டப்பட்டால்தானே அழகாகவும், பொருத்தமாயும் இருக்கும்? அதுதான் சந்தோஷம் அளிக்கும் காட்சி. அவலட்சணம் பிடித்த கழுதைக்கு அழகிய பூவைச் சூட்டினால் அதை எப்படிப் பார்த்து அநுபவிக்க முடியும்? கழுதையினாலேயே முடியாதே! பூவைக் காகிதம் என்று நினைத்துக் கொண்டு தின்றுவிடப் பார்க்குமே? மற்றவர்கள் அந்தக் காட்சியைப் பார்த்து எப்படிச் சந்தோஷப்பட முடியும்?'' என்றான் அமரநாத்.

''உம்மோடு என்னால் விவகாரம் செய்ய முடியாது, ஸார்! ஆனாலும் நான் சொல்லுகிறதுதான் சரி!'' என்றான் பட்டாபிராமன்.

''சூரியா! நீ என்ன சொல்கிறாய்?'' என்று அமரநாதன் கேட்டான்.

''நீங்கள் சொல்வதை நான் ஆமோதிக்கிறேன்!'' என்றான் சூரியா.

''பார்த்தாயா, பட்டாபி! மெஜாரிட்டி அபிப்பிராயம் உனக்கு விரோதமாக இருக்கிறது. என்ன செய்வது?'' என்றான் அமரநாத்.

''உலகத்தில் மெஜாரிட்டியார் முட்டாள்கள் என்று சுவாமி விவேகானந்தர் சொல்லியிருக்கிறாரே, தெரியாதா?'' என்றான் பட்டாபி.

''அப்பனே! 'பெரும்பான்மையோர் முட்டாள்கள்' என்று சுவாமி விவேகானந்தர் சொல்லலாம்; ஆனால் நீயும் நானும் சொல்லக் கூடாது! வருங்காலத்தில் மெஜாரிட்டிதான் மாதா, பிதா, குரு, தெய்வம் எல்லாம்! பெரும்பான்மையோரை அலட்சியம் செய்கிறவன் உலகில் முன்னுக்கு வரவே முடியாது. பெரும்பான்மை மக்களின் இஷ்டப்படி நடக்க முடியாவிட்டால் அவர்களை ஏமாற்றியாவது பிழைக்க வேண்டும்!'' என்றான் அமரநாத்.

## 19. மோட்டார் விபத்து

**மா**சி மாதத்து மனோரம்மியமான மாலை நேரத்தில் ராஜம்பேட்டையை நெருங்கிச் சென்ற சாலையில் இரட்டை மாடு பூட்டிய பெட்டி வண்டி ஒன்று ஜாம் ஜாம் என்று போய்க் கொண்டிருந்தது. காளையின் கழுத்தில் கட்டியிருந்த பெரிய சதங்கை மணிகள் 'கலீர் கலீர்' என்று சப்தித்தன. வண்டியும் வண்டி மாடுகளும் வண்டிக்காரன் கட்டிய முன்

டாகம் அந்த வண்டி பட்டாமணியம் கிட்டாவய்யரின் வண்டியென்பதை உலகமறியத் தெரிவித்தன. வண்டிக்குள்ளே கிட்டாவய்யரின் மூத்த புதல்வன் சூரியநாராயணன் பெட்டி படுக்கை சகிதமாக வீற்றிருந்தான். அவனுடைய உள்ளம், தன்னுடைய அருமைத் தங்கை லலிதாவைப் பற்றியும் அவளைப் பார்ப்பதற்காகப் பட்டினத்திலிருந்து வரப் போகிற மேதாவி எப்படியிருப்பான் என்பது பற்றியும் எண்ணமிட்டுக் கொண்டிருந்தது. காரணமில்லாமலே அந்த மேதாவியின் பேரில் சூரியாவுக்குச் சிறிது கோபமும் உண்டாகியிருந்தது. "மகா பெரிய மனிதன் இவன்! பெண்ணைப் பார்க்க வருவதாம்! பிடித்திருக்கிறது – இல்லை என்று தீர்ப்புச் சொல்வதாம்! சுத்த வெட்கக் கேடு!" என்ற எண்ணம் அடிக்கடி தோன்றி அவன் மனத்தை உறுத்தியது. முந்தா நாள் இரவு தாமோதரம் பிள்ளை வீட்டு மச்சின் பேரில் நடந்த சம்பாஷணையும் இடை இடையே அவனுக்கு நினைவு வந்து கொண்டிருந்தது.

ராஜம்பேட்டை இன்னும் எவ்வளவு தூரம் இருக்கிறது என்று தெரிந்துகொள்ளும் பொருட்டுச் சூரியா வண்டி முகப்பில் வைத்திருந்த பெட்டி படுக்கையின் மேலாக எட்டிப் பார்த்தான். சமீபத்தில் ஒரு மைல் கல் தென்பட்டது. அதில் பெரிய கறுப்பு எழுத்தில் 3 என்று எழுதியிருந்தது. "இன்னும் மூன்று கல் இருக்கிறது. இருட்டுவதற்கு முன் போய்விடலாமா, முருகா!" என்று சூரியா கேட்டான். "நல்லாப் போய் விடலாம்! நீங்கள் மட்டும் 'மாட்டை விரட்டாதே' என்று சும்மாச் சும்மாச் சொல்லியிராவிட்டால் இத்தனை நேரம் போய்ச் சேர்ந்திருப்போம்! அம்மாகூட, 'சாயங்காலம் காப்பி சாப்பிடச் சின்னையாவை வீட்டுக்கு அழைத்து வந்துவிடு' என்று சொல்லியிருந்தாங்க!" என்றான் வண்டிக்கார முருகன். இப்படி அவன் சொல்லிக் கொண்டிருக்கும்போது, முன்னால் சுமார் அரை பர்லாங்கு தூரத்தில் ஒரு கட்டை வண்டி போய்க் கொண்டிருப்பதைச் சூரியா கவனித்தான். அந்த வண்டிக்குள்ளே

யாரோ பெண் பிள்ளைகள் சிலர் உட்கார்ந்திருக்கிறார்கள் என்று தெரிந்தது. அந்த வண்டியும் ராஜம்பேட்டைக்குத்தானே போக வேண்டும்? வண்டிக்குள் இருப்பவர்கள் யாராயிருக்கும்?— என்று சூரியா சிந்தித்துக் கொண்டிருந்த போதே பின்னால் 'பாம்' 'பாம்' என்று முழங்கிக் கொண்டு ஒரு மோட்டார் வண்டி வந்தது.

''பாருங்க, சின்னய்யா! மோட்டார் வண்டியிலே ஏறிவிட்டாலே தலை கிறங்கிப் போவுது! இவன் வந்துட்டா, மற்ற வண்டியெல்லாம் உடனே ஒதுங்கிக் கொள்ள வேணுமாம்! மோட்டார் வண்டிக்கு என்று தனியாக ரோடு போட்டுக் கொள்ளுகிறது தானே!'' என்று புகார் சொல்லிக் கொண்டே முருகன் வண்டியைக் கொஞ்சம் சாலை ஓரத்தில் ஒதுக்கினான். மோட்டார் வண்டி அவர்களைத் தாண்டி ஒரு பெரிய புழுதிப் படலத்தை வாரித் தூவி விட்டு மேலே சென்றது.

அது போன உடனே முருகன், ''சின்னையா கூடப் படிச்சுப் பெரிய உத்தியோகத்துக்கு வந்து மோர்ட்டார் கார் வாங்க வேணும்!'' என்றான்.

''அப்போது, மோட்டார்காரர்களைப் பற்றி நீ இப்போது திட்டியது போலத்தானே பத்துப் பேர் என்னையும் திட்டுவார்கள்!'' என்றான் சூரியா. இதற்குள் எதிரே கொஞ்ச தூரத்தில் நடந்த சம்பவம் அவர்களுடைய பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தது.

பெட்டி வண்டியைத் தாண்டிச் சென்ற மோட்டார், கட்டை வண்டியையும் சாலை ஓரமாக ஒதுங்கச் செய்வதற்காகப் 'பாம்' 'பாம்' என்று முழங்கியது. கட்டை வண்டிக்காரன் இடது புறத்தில் ஒதுக்குவதற்குப் பதிலாக, வலது பக்கத்தில் ஒதுக்க முயன்றான். கட்டை வண்டியை வலப் பக்கமாகக் கடக்க முயன்ற மோட்டார் அது முடியாதென்று தெரிந்து அதிவேகமாக ஒரு திரும்புத் திரும்பி இடப் பக்கம் தாண்டிச் சென்றது. போகும்போது வண்டி மாட்டின் மேல் உராய்ந்து விடும்போல் அவ்வளவு நெருக்கமாகச் சென்றபடியால் வண்டி மாடுகள் மிரண்டு சாலையோரத்துப் பள்ளத்தில் இறங்கி

ஆண்டுச் சந்தா ரூ. 7/-. ஆறு மாதம் ரூ. 3/50 ★ மானேஜர், 'கோகுலம்', கல்கிப் பூங்கா, சென்னை-31









விட்டன. அப்படி இறங்கியதில் மாடு களை மூக்கணையுடன் பிணைத்திருந்த கயிறுகள் கழன்றன. வண்டிக்காரன் காபரா அடைந்து கீழே குதித்தான். வண்டியின் மூக்கணை மேலே போயிற்று. வண்டியின் பின்தட்டுக் கீழே வந்து தரையைத் தொட்டது. வண்டிக்குள் ளிருந்தவர்கள் சறுக்கு மரத்திலிருந்து வழுக்கி விழுகிறவர்களைப் போல் உருண்டு வந்து வெளியே தரையில் விழுந்தார்கள். அவர்கள் மேலே சாமான்கள் உருண்டு விழுந்தன.

இத்தகைய கட்டை வண்டி விபத்தை உண்டாக்கிய மோட்டார் வண்டி அதை மறைப்பதற்கு ஒரு பெரிய புழுதித் திரை யையும் உண்டாக்கி விட்டு மறுகணமே தூரத்தில் மறைந்து போய்விட்டது.

புழுதி மறைத்தபடியால் மேற்படி விபத்தைப் பற்றி நடந்ததைக் காட்டி லும் அதிகமாகச் சூரியா மிகைப்படுத்தி எண்ணிக் கொண்டான்.

''முருகா! ஓட்டு! ஓட்டு! வண்டி குடையடித்து விட்டதுபோலிருக்கிறதே! சீக்கிரம் ஓட்டு!'' என்று பதறிக் கொண்டே கூறினன்.

முருகனும் வண்டியை வேகமாக ஓட்டிக் கொண்டு போய்ச் சம்பவம் நடந்த இடத்துக்குச் சமீபத்தில் கொண்டு வந்து நிறுத்தினன்.

''சின்னய்யா! நம்ம அத்தை அம்மா போல இருக்கிறதே! பம்பாய் அம்மா வும் அவங்க பெண்ணுங்கூட இருக்காங் களே! சாமி! ஆண்டவனே! ஒருத்தருக் கும் ஒண்ணும் இல்லாமல் இருக்க வேண் டும்!'' என்று வண்டிக்காரன் சொன்னது ஒன்றும் சூரியாவின் காதில் விழவில்லை. வண்டியிலிருந்து அவன் பளிச்சென்று கீழே குதித்துக் குடை யடித்த வண் டியை நெருங்கி ஓட்டமாக ஓடினன்.

குடை சாய்ந்த வண்டியின் பின்புறச் சட்டங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு பம்பாய் ராஜம்மாள் உட் கார்ந்திருந்தாள். அவள் பக்கத்தில் மூட்டைகள் சிதறிக் கிடந்தன. ஒரு தகரப் பெட்டி இன்னும் வண்டிக்குள் ளேயே இருந்து கொண்டு தானும் கீழே விழலாமா வேண்டாமா என்று யோசித் துக் கொண்டிருந்தது. ராஜம்மாளுக்கு வண்டிச் சட்டத்தைத் தான் விட்டால் அந்தப் பெட்டி தன் தலையில் விழுந்து விடும் என்ற பயம் தோன்றியிருந்தது. ஏற்கனவே நோயினால் மெலிந்திருந்த அவளுடைய முகம் மேற்படி பயத்தினால் வெருண்ட தோற்றம் அளித்தது. ஆனால், அவளுடைய பயத்துக்குக் கார ணம் இது மட்டுந்தான? ''அம்மா! அம்மா! இதோ நான் வெள்ளத்தில் முழுகப் போகிறேன். என் மேல் அலை வந்து மோதுகிறது. யாராவது என் னைக் காப்பாற்றுங்கள்! இதோ முழுகப் போகிறேன்!'' என்று அவளுடைய செல்வக் குமாரி சீதா அலறிக் கொண் டிருந்ததும் ராஜம்மாளின் பீதிக்கு ஒரு காரணமா யிருக்கலா மல்லவா?

ராஜத்துக்கு நாலைந்து அடி தூரத்தில் தரையில் விழுந்திருந்த இன்னொரு ஸ்திரீ ''ஐயோ! அப்பா!...'' என்று முனகிக் கொண்டே மெதுவாக முயன்று எழுந்து உட்கார்ந்தாள். ''மோட்டார் சத்தம் கேட்டவுடனேயே 'வண்டியை ஒதுக்கி ஓட்டடா' என்று அடித்துக் கொண் டேன். கேட்டால்தானே?'' என்று வண் டிக்காரனுக்கு வாய் நிறைந்த ஆசீர்வா தங்களைச் செய்தாள். பிறகு, ''ராஜம்! உனக்குக் காயம் கீயம் ஒன்றும் பட வில்லையே!'' என்று கேட்டாள்.

ஏதோ பயங்கரமான பெரும் விபத்து ஏற்பட்டு விட்டதாக எண்ணி அலறிப் புடைத்துக் கொண்டு ஓடி வந்த சூரியா மேற்கூறிய காட்சியை ஒரே கண்ணேட் டத்தில் பார்த்து ஒரு நொடிப் பொழு தில் நிலைமையைத் தெரிந்து கொண் டான். வண்டிக்குச் சற்றுத் தூரத்தில் எழுந்து நிற்க முயன்று கொண்டிருந்த ஸ்திரீ தன்னுடைய மூத்த அத்தை அப யாம்பாள் என்பதையும் வண்டிக்கருகில் உட்கார்ந்திருந்தவள் பம்பாய் அத்தை யாகத்தான் இருக்க வேண்டும் என்ப தையும் தெரிந்து கொண்டான். ஆனல், இதிலெல்லாம் அவனுடைய கவனம் ஒரு நிமிஷத்துக்கு மேல் நிற்கவில்லை.

சாலையின் ஓரத்தில் இருந்த நீர் ஓடை யில் விழுந்து காலையும் கையையும் அடித் துக்கொண்டு, ''அம்மா! நான் முழுகப் போகிறேன்!'' என்று சத்தமிட்டுக் கொண்டிருந்த இளம் பெண்ணின் மீது அவனுடைய கண்களும் கவனமும் சென் றன. இரண்டே எட்டில் ஓடைக்கரைக்கு ஓடிச் சென்றான். நீரில் மூழ்கிக் கொண் டிருந்த பெண்ணைக் கரையேற்றிவிட வேண்டும் என்றஎண்ணத்தோடேதான்!

ஓடையில் விழுந்து மேற்கண்டவாறு கூச்சலிட்டுக் கொண்டே காலினாலும், கையினாலும் தண்ணீரை அடித்து அலை களை உண்டாக்கிக் கொண்டிருந்த இளம் பெண், ஓடைக் கரையில் வந்து வியர்க்க விருவிருக்க நின்ற வாலிபனைப் பார்த் தாள். உடனே கூச்சலிடுவதையும் தண் ணீரைக் காலாலும் கையாலும் அடிப் பதையும் நிறுத்தினாள். ஏதோ ஓர் அபூர்வமான அதிசயக் காட்சியைப் பார்ப்பது போல் சூரியாவின் முகத்தை உற்றுப் பார்த்தாள். அப்படிப் பார்த்த வண்ணம் கலகலவென்று சிரித்தாள். அந்தச் சிரிப்பின் ஒலி செவியில் விழுந்த பொழுது அமுதமுண்ட குயிலின் கீதம் ஆயிரம் பதினாயிரம் வண்ண மலர்களாக மாறி மேலே விழுவது போன்ற உணர்ச்சி சூரியாவுக்கு உண்டாயிற்று.

(தொடரும்)

ஏப்ரல் 16உ

# கல்கி இளைஞர் மலர்



## இளைஞர் சமுதாயம்:

இளைஞன் என்றால் பாப் இசை, ஹிப்பி பாணி உடை என்றுதான் ஒரு தவறான அபிப்பிராயம் பரப்பப் பட்டு வருகிறது. மாறாகத் தமிழகமெங்கும் வாலிபர் சங்கங்கள் பல அருமையான நற்தொண்டுகள் புரிந்து வருகின்றன. அத்தகைய இளைஞர் சங்கங்கள் தங்கள் தங்கள் பணிகளை விவரித்துச் சுருக்கமாக எங்களுக்கு எழுதலாம். மார்ச் 25ந் தேதிக்குள் வரும் கடிதங்களின் அடிப்படையில் தமிழகத்தில் பரவலாக உள்ள இருபத் தாறு வாலிபர் சங்கங்களைத் தேர்ந்தெடுத்து அவை ஆற்றும் பணியினைக் காணக் கல்கி காரியாலயத்தின் ஆசிரியர் குழுவினரில் ஒரிருவர் நேரில் வருவார்கள். சங்கத்தைச் சேர்ந்தவர்கள், அதன் ஆதரவாளர்கள் முதலியோருடன் அளவளாவிய பின் தங்கள் அநுப வங்கள் பற்றிக் கல்கியில் எழுதுவார்கள். ஏப்ரல் 16ந் தேதி கல்கி இளைஞர் மலரிலிருந்து இந்தப் புதிய அம்சம் தொடங்குகிறது.

## வாரம் ஒரு நகைச்சுவைக் கதை:

நகைச்சுவைக் கதைகளை வரவேற்கிறோம். ஏப்ரல் 16ந் தேதி இளைஞர் மலரில் தொடங்கித் தொடர்ந்து பன்னிரண்டு வாரங்களுக்கு நகைச்சுவைக் கதைகள் கல்கியில் இடம் பெறும். இப்பன்னிரண்டு கதைகளுள் சிறந்த ஒன்று என்று நாங்கள் கருதும் கதைக்கு வழக்க மான சன்மானம் தவிர விசேஷப் பரிசும் உண்டு. (ரூ. 100). இதுவரை வேறு எந்தப் பத்திரிகையிலும் எழுதியிராத புது எழுத்தாளர் இந்த விசேஷப் பரிசைப் பெறுவாரேயானால் எங்கள் மகிழ்ச்சி இரட்டிப்பாவ துடன் விசேஷப் பரிசும் இரட்டிப்பாகும். (ரூ. 200). எழுத்தாள அன்பர்களின் முழு ஒத்துழைப்பையும் வேண்டுகிறோம்.

★ புத்தாண்டு தினத்தை யொட்டி இளைஞர் மலராக வெளிவரும் ஏப்ரல் 16உ கல்கியில் வாலிப உள்ளங் களை ஈர்க்கும் இதர பல விசேஷ அம்சங்களும் சிறப்புச் சிறுகதைகளும் உண்டு.

தவிர, **''அன்பே, அகிலா!''** என்ற புதிய சித்திரத் தொடர்கதையும், **''இன்றையப் பிரச்னை''**, **''தெரிந்த விளையாட்டு – தெரியாத விவரம்''** போன்ற புதிய தொடர் அம்சங்களும் ஆரம்பமாகின்றன.

# மூன்று மந்திரவாதிகள்

கதை: வாண்டுமாமா

சித்திரம்: ராமு

25


















குழந்தைகளே, எனக்கு வயதா
னாலும் பார்வை மங்கவில்லை.
குளிர் தான் தாங்க முடியவில்லை.
கொஞ்சம் சுள்ளிகளைப் பொறுக்கிக்
கொண்டு வந்து இந்தக் கணப்பில்
போடுங்கள். குளிர் காய்ந்து
கொண்டே நான் கண்ட சில
காட்சிகளைச் சொல்லுகிறேன்.

கிழவரின் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய வேட்டை
யன் சுள்ளிகளுடன் மற்றவர்களுக்கு முன்னதாக
மந்திர வட்டத்துக்குள் கால் வைக்கிறான். அடுத்த
வினாடி அவன் கல்லாகி விடுகிறான்.















பொட்டையனின் பார்வையின் உக்கிரத்தினால் சசாங்கன் எரிந்து சாம்பலானதும் அவன் மந்திர சக்தியின் கட்டும் விடுபடுகிறது. கல்லானவர்கள் தங்கள் உண்மை வடிவைப் பெறுகிறார்கள்.

தம்பி! ஆனந்தா, பார்த்திபா. இங்கு கிடந்த கற்கள் நீங்கள் தானா?

நானும் அப்படித் தான். உங்களுக்கு உயிர் கொடுத்த உத்தமன் இவன் தான். என் நண்பன்.

அண்ணா! நீங்கள் எப்படி வந்தீர்கள்? காட்டுக் கோயில் வேங்கை மரத்தில் பார்த்திபனின் அம்பில் ரத்தம் வழிவதைப் பார்த்து நான் ஓடோடி வந்தேன் இங்கு.

முதலில் இந்த மீனுக்கு விடுதலை கொடுத்து உருமாற்றுகிறேன். நான் இன்று உடலோடு உயிரோடு உங்களோடு சேர்ந்ததற்கு இந்த மீன் தான் காரணம்.

பார்த்திபன் குவளையை உடைத்ததும் மீனாக இருந்த புவனா அதிலிருந்து வெளிப் படுகிறாள். மந்திர சக்தி விடுபட்டு விட்டதால் சுய உருப் பெறுகிறாள்.

புதுப்பெண்ணே, என் புவனா! என் மூத்த சகோதரர்களை உனக்கு அறிமுகப் படுத்துகிறேன் வா.

சசாங்கனின் மந்திரக் கட்டுக்கள் விடுபட்ட அதே வேளையில் புவனாவின் மூத்த சகோதரிகளான காஞ்சனாவும் கல்பனாவும்...

இளவரசே! எங்களையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். சசாங்கனின் புதல்விகளான எங்களை யாரும் ஏற்க மாட்டார்கள். புவனா! எங்கள் மீது கருணை காட்டு. உன் காதலனிடம் சிபாரிசு செய்யம்மா.

பார்த்திபா! இதெல்லாம் என்னப்பா?

இதுவா? பெரிய கதை. பிறகு சொல்லுகிறேன்... ம்... புவனா நீ என்ன சொல்லுகிறாய்?

சொல்வதற்கு என்ன இருக்கிறது. நீங்கள் அதிர்ஷ்டக்காரர். நாங்கள் ஒற்றுமையாக வாழுவோம். என் சகோதரிகளையும் ஏற்றுக் கொள்ளுங்கள்.

தொடரும்

சருமத்தைப் பாதுகாப்பதில்

# மைசூர் சந்தன சோப்புக்கு

நிகராக எதுவும் இல்லை

மதிப்புமிக்க இந்த டாய்லெட் சோப்பில் கலந்துள்ள சந்தனத் தைலம் உங்கள் சருமத்தை ஆரோக்கிய மாக வைத்துக்கொள்வதுடன், இளமைப் பொலிவை யும் அளிக்கிறது.

பகுத்தறிந்து பயன்படுத்துபவர்களுக்கு ஏற்ற மென்மையான டாய்லெட் சோப்.

**மைசூர் கவர்ன்மெண்ட் சோப் பாக்டரி**

பெங்களூர் - 12



"பழைமையான சுரகரப்-பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளுக்கும், பற்களுக்கும் தீங்கு இழைக்கக்கூடும்..."




## கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

கால்கேட் பற்பொடி நவீன பல் பராமரிப்பை சிக்கனமாக்குகிறது. அதன் குளுமையான, இன்மணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள். உங்கள் குடும்பத்திற்கு இன்றே ஒரு டின் வாங்குங்கள்.

TP.G. 20. TM

# இப்பொழுது
# தேநீரின் சுவை குன்றுமல்
# புத்துணர்ச்சி நீடித்திருக்க

---

## ஸ்பென்ஸரின் புதிய வெகுமதி

---

நீங்கள் எப்போதும் விரும்பும்

## ஸ்பென்ஸரின்

### ரெட் பாண்ட் மற்றும் கிரீன் லேபல்'டீ' (400 கிராம்)

இப்பொழுது சுகாதாரமான, கவர்ச்சிமிக்க,
காற்றுப்புகாத, உங்களுக்கு என்றும் உபயோகப்
படக்கூடிய, பாலிஎதலீன் டப்பாக்களில் கிடைக்கின்றன

இந்தச் சலுகை
சென்னை, ஹைதராபாத்
மற்றும் பெங்களூர்
நகரங்கட்கு மட்டுமே.
ஸ்டாக் தீருமுன்
முந்துங்கள்




ஸ்பென்ஸர் அண்ட் கோ.
லிமிடெட்,
சென்னை மற்றும் கிளைகள்

FDSST-1539THA



# "ஸைக்கோ ஸாரநாதன்"



கி.ராஜேந்திரன்

## 4 குவராவுக்குக் குட்பை!

கொடைக்கானல், ''ஹாப்பி ஹாலிடே'' என்ற ஹோட்டல். இருபத்தி நாலாம் நம்பர் அறையில் அந்த ஹிப்பி • கட்டிலில் அமர்ந்து ஒரு கத்திரிக்கோலால் சர்வ ஜாக்கிரதையாக முதல் நாள் 'மெய்ல்' பத்திரிகையில் வெளியாகியிருந்த ஸைக்கோ ஸாரநாதனின் புகைப்படத்தைக் கத்திரித்து எடுத்தான். பின்னர் 'ஸெல்லோ டேப்'பினால் அதை டிரெஸ்ஸிங் டேபிள் நிலைக் கண்ணாடியில் ஒட்டினான். கதவு தாளிடப்பட்டிருக்கிறதா என்று பார்த்துவிட்டு, ஜன்னல்களின் திரைச் சீலைகளையும் இழுத்து மூடியபிறகு வந்து கண்ணாடி எதிரே ஒரு ஸ்டூலில் அமர்ந்தான். பின்னர் மெல்ல, நிதானமாகத் தன் தாடியைப் பிய்த்து எடுத்தான். . முகத்தில் ஒரு நாள் வளர்ச்சியுள்ள மயிர் இருந்ததால் ஒட்டப்பட்டிருந்த தாடி, மீசை ஆகியவற்றைப் பிய்ப்பது அத்தனை சுலபமாக இல்லை; ஏன் வேதனையாகக் கூட இருந்தது. எந்தவிதமான 'பவரு'மில்லாத வெறும் கண்ணாடி பொருத்தப்பட்ட ஆந்தைக் கண் மூக்குக் கண்ணாடியைக் கழற்றிப் போட்டான். தலை வழுக்கையை மூடி, கழுத்துவரையில் நீண்ட டோப்பாவை அகற்றினான். ஒப்பனை நீங்கப் பெற்றதும் அவன் நிலைக் கண்ணாடியில் ஒட்டப்பட்டிருந்த படத்தையும் அதன் அருகில் தெரிந்த தன் பிரதிபிம்பத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தான். டோப்பாவை பிரஷ்ஷால் நீவி விட்டபடியே, ''துளிக்கூட வித்தியாசம் இல்லை; ஜெயிலில் ஃபோட்டோ நன்றாகத்தான் எடுத்திருக்கிறார்கள்'' என்று முணுமுணுத்தபோது அவன் அதரங்களில் ஒரு திருப்திமிக்க புன்முறுவல் அரும்பியது. கண்கள் பளபளத்தன. உள்ளங் கைகள் ஒன்றை ஒன்று தடவிக் கொடுத்தன, விரல்களைப் பிடித்து விட்டன.

நிலைக் கண்ணாடியில் பெரிதாகத் தெரிந்த அவன் முகம் சிறுத்துக்கொண்டே வந்து அவன் முழு உருவமும் இப்போது தெரிந்தது. அது மட்டுமல்ல, அவன் கைதிக் கூண்டில் நிற்பதும் புரிந்தது. சுற்றிலும் வழக்கறிஞர்களும்

பார்வையாளர்களும் நீதிபதியும் நீதிமன்றத்தில் பணியாற்றும் பிறரும் இருந்தார்கள். வழக்கு விசாரணை நடந்து கொண்டிருந்தது. டாக்டர் குஹா, ஆணித்தரமாக, அழுத்தந் திருத்தமாகச் சாட்சி சொன்னார்: ''நான் கைதியை ஒரு நாள் இரு நாட்கள் அல்ல, இரண்டு வாரம் கோர்ட்டார் அனுமதி பெற்றுப் பரிசோதித்திருக்கிறேன். தீர்மானமாகச் சொல்கிறேன். ஸாரநாதன் கொலைக் குற்றம் சாட்டப்பட்டுத் தூக்கில் தொங்க வேண்டியவன் அல்ல. மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டு மனோதத்துவ நிபுணர்களிடம் சிகிச்சை பெற வேண்டியவன்.''

நீதிபதி குறுக்கிட்டார்: ''டாக்டர் குஹா! அவனுக்குத் தண்டனை விதிப்பதா இல்லையா, என்ன தண்டனை கொடுப்பது என்றெல்லாம் நிர்ணயிக்க வேண்டியது என் பொறுப்பு. என் வேலையில் நீங்கள் தலையிட வேண்டாம். நீங்கள் அவனைப் பரிசோதித்ததில் என்ன கண்டீர்கள்? அதை மட்டும் சொல்லுங்கள், போதும்!''

''மன்னிக்க வேண்டும். உணர்ச்சி வேகத்தில் பேசி விட்டேன்'' என்றார் டாக்டர் குஹா.

''அதை என்னால் நம்பமுடியவில்லை. இந்த வழக்கில் ஆரம்பத்திலிருந்தே ஒரு 'ஸென்ஸேஷன்' ஏற்பட்டுப் போய்விட்டது. அந்தப் பரபரப்பில் பங்கு பெற்றுப் பிராபல்யம் அடைய வேண்டும் என்ற எண்ணம் பலருக்கு ஏற்படுவது இயற்கை. ஆனால் உங்களைப் போல் கௌரவமான நிலையில் இருந்து தொழில் நடத்துபவர்கள் மனத்தைக் கட்டுப்படுத்தத் தெரிந்து கொள்ள வேண்டும்.''

''யுவர் ஆனர்! நான் ஏற்கனவே பெரும் புகழும் அடைந்தவன். எனக்குப் புதிதாகப் பிராபல்யம் ஏதும் வந்துவிடப் போவதில்லை; அதை நான் வேண்டவும் இல்லை.'' சூடாகப் பதில் சொன்னார் குஹா.

நீதிபதியும் சளைக்கவில்லை. ''அப்படியானால் அதற்குத் தகுந்தாற்போல் நடந்து கொள்ளுங்கள். நீங்கள் மேற்கொண்ட பரிசோதனைகளையும் அவற்றின் முடிவுகளையும் பற்றி மட்டுமே இங்கு பேசுங்கள். குரலை உயர்த்தாமல், பதறாமல் அமைதியாகச் சொல்லுங்கள்'' என்றார்.

* * *

டாக்டர் குஹா, பானர்ஜியைத் தேடி வந்தபோது பிராபல்யம் அடையலாம் என்ற எண்ணம் அவருக்கு இல்லாமல் போகவில்லை. அவருக்குப் பணம் இருந்தது; போதுமான அளவு இருந்தது. ஆனால் பணத்தைக் கூட ஒரு நிலையில் 'போதும்' என்று கருதிய மனம் புகழைக் குறித்தும் அவ்வாறே நினைக்க மறுத்தது. மனோதத்துவ நிபுணரான அவருக்கு இந்த மனோதத்துவம் புரியாமல் போகவில்லை. வழக்கறிஞர்களோ அல்லது டாக்டர்களோ விளம்பரம் செய்து கொள்ளக் கூடாது என்பது அத்தொழில்களில் எழுதப்படாத ஆனால் வழக்கில் இருக்கிற ஒரு சட்டம். ஆனால் விளம்பரம், அதை ஒதுக்குவது சாத்தியமில்லாத வகையில் தானாகவே வந்தால் யார்தான் வேண்டாம் என்பார்கள்? டாக்டர் குஹாவுக்கு இப்போது அப்படி ஒரு சந்தர்ப்பம். அவர் வழக்கறிஞர் பானர்ஜியைப் போய்ப் பார்த்தாரேயாகில், அது மனநோய் மருத்துவ உலகின் நலனுக்காகத்தான் இருக்கும்; ஒரு மனிதன் அநியாயமாகத் தூக்கிலிடப்படுவதைத் தவிர்ப்பதற்காகத்தான் இருக்கும். ஆனால் அதன் விளைவாகப் பாரத நாட்டின் பத்திரிகைகள் ஒன்று விடாமல் அனைத்திலும் தம் பெயர் அடிபட்டுப் பிரபலமடைந்தால் அதற்கு அவர் என்ன செய்ய முடியும்? பானர்ஜி தமது சாட்சியத்தின் காரணமாக வழக்கில் வென்று விடுவாரேயானால் அப்போது பிராபல்யத்துடன் பெரும் புகழும் வந்து சேரும்தான். ஆனால் இப்படித் தம் பெயர் கொடி கட்டிப் பறக்குமே என்பதற்காகச் சும்மா இருந்துவிட முடியுமா? கடமை என்று ஒன்றிருக்கிறதல்லவா? இப்படித் தமது புகழாசைக்கு ஒரு சமாதானத்தையும் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டுதான் டாக்டர் குஹா, பானர்ஜியைப் போய்ப் பார்த்தார். அவர் யோசனையின் பேரில் தான் பானர்ஜி, ''குற்றவாளியை



ஒரு மனோதத்துவ நிபுணர் பரிசோதிக்கக் கோர்ட்டார் அனுமதிக்க வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

இந்தக் கோரிக்கைக்கு நீதிபதி இணங்கினார். டாக்டர் குஹா, ஸாரநாதனுடன் பல நாட்கள், பல மணி நேரம் பேசினார்.

பேசப்பேச, அவன் பேசுவதை இவர் கேட்க கேட்க, உண்மையாகவே அவனுக்கிருந்த மனோவியாதியிலும் அதைக் குணப்படுத்துவதிலும் இவருக்குத் தீவிர ஈடுபாடு ஏற்பட்டு விட்டது. தொடக்கத்தில் இருந்த பிராபல்யம் அடையலாம் என்ற நோக்கம் பின்னணிக்குப் போய் அடியோடு மறைந்தே விட்டது. அதற்குப் பதில் இப்போது மனநோய் உள்ள இவனைக் கொலைகாரன் என்று கருதுவது பெருந்தவறு; இவனுக்குத் தூக்குத் தண்டனை கிடைக்காமல் காப்பதே தமது தலையாய கடமை; இவனது மனநோயைக் குணப்படுத்துவதே இனி தமது முக்கிய குறிக்கோள் என்றெல்லாம் ஒரு லட்சிய வெறி உண்டாகி விட்டது. இத்தனை கொலைகளையும் அவன் திட்டமிட்டு, செய்ய வேண்டும் என்று தீர்மானித்துச் செய்யவில்லை. அவனையும் மீறிய ஓர் உந்துதலால் அவனாலேயே தவிர்க்க முடியாத ஒரு வேகத்தில் செய்துவிட்டான் என்று தீர்மானமாக நம்பினார்.

கட்டிய மனைவியை ஓர் இளைஞன் ஒரு மாதம் இரண்டு மாதம் கூட அணைக்காமல் உறுதியாக இருக்கலாம். ஆனால் அதன்பிறகு அடக்க முடியாத ஒரு வெறி அவனை ஆட்கொள்ளுமல்லவா?

அப்படித்தான் இவனையும் அவ்வப்போது கொலை வெறி பிடிக்கிறது; ஆட்டிப் படைக்கிறது. இந்த மனவியாதி இருப்பதால் இவன் உள்ளம் எவ்வளவு துன்பப்படுகிறது; அதை வெளியே சொல்லிக் கொள்ளவும் முடியாமல் இவன் எவ்வளவு தூரம் சங்கடத்துக்குள்ளாகிறான்; இந்த வியாதி இவனுக்கு ஏன் ஏற்பட்டது; எப்படி இவனைக் குணப்படுத்துவது? — இவையெல்லாம் பின்னால் கண்டுபிடித்துத் தீர்மானிக்க வேண்டிய விஷயங்கள். வழக்கு ஸாரநாதனுக்குச் சாதகமாக முடிந்த பிறகு யோசிக்க வேண்டியவை. இப்போதைக்கு அவன் பரிதாபத்துக்குரியவன் என்பதை நிரூபித்தாலே போதும்.

போலீஸாரின் சாட்சியங்கள் பழுதில்லாமல் இவன் கொலைகாரன் எனச் சுட்டிக்காட்டிய போதிலும் டாக்டர் குஹாவின் சாட்சியத்தை நீதிபதியினால் புறக்கணிக்க முடியவில்லை. ஸாரநாதன் கொலை செய்தான்; ஆனால் அவன் முன்கூட்டியே திட்டமிட்டு எதையும் செய்யவில்லை. என்ன செய்கிறோம் என்று தெரியாமலேயே செய்தான் — இந்த முடிவுக்குத்தான் நீதிபதி வர வேண்டியிருந்தது. அதே சமயம் ஸாரநாதனை விடுதலை செய்வதும் முடியாது. அவனால் சமூகத்துக்கு ஆபத்து என்பதோடு, நடந்த கொலைகளுக்கு அவன் முழுமையாக இல்லாவிடினும் பெருமளவுக்குப் பொறுப்பு ஏற்றேயாக வேண்டும்.

''....ஆகவே இவனுக்கு ஆயுள் தண்டனை விதிக்கிறேன்.'' — நீதிபதி தீர்ப்பைப் படித்துவிட்டு எழுந்து செல்ல முற்பட்ட சமயம் டாக்டர் குஹா, ''மைலார்ட்! மைலார்ட்! ஒரு விண்ணப்பம்!'' என்றார்.

''என்ன?'' — அதிருப்தியைத் தெரியப்படுத்தப் புருவங்களைச் சுருக்கி, நேரமாகி விட்டதை உணர்த்தக் கைக் கடிகாரத்தைப் பார்த்தார் நீதிபதி.

''மைலார்ட்! கைதியைச் சிறைச்சாலையில் போடுவதுடன் நின்றுவிடக் கூடாது. சிறையில் கைதிகள் நோய் வாய்ப்பட்டால் அவர்களை ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போய்ச் சிகிச்சை பெற வசதி செய்ய வேண்டியது போலீஸார் கடமை. அந்தக் கடமையை ஸாரநாதன் விஷயத்திலும் அவர்கள் நிறைவேற்ற வேண்டும். வாரம் ஒரு முறை அவர்கள் என் மருத்துவ மனைக்கு ஸாரநாதனைத் தக்க பாதுகாப்போடு அனுப்பி வைக்கட்டும் சிகிச்சைக்கு.''

''நீங்கள் சொல்வதில் நியாயம் இருக்கிறது, மிஸ்டர் குஹா! ஆனால் போலீஸார் கைதிகளை மருத்துவமனைக்கு அழைத்துப் போவதைத்தான் நான் கண்டிருக்கிறேனே ஒழிய ஒரு டாக்டர் தாமாகவே கைதிக்குச் சிகிச்சை செய்ய முன் வந்து பார்த்ததில்லை.''

''மைலார்ட்! நான் இதை ஸாரநாதனிடம் கொண்ட கருணையினாலோ அல்லது எனக்குச் செல்வமோ புகழோ கிடைத்து விடும் என்பதற்காகவோ சொல்லவில்லை. மனநோய் மருத்துவத் துறை இதனால் பயன் அடையக்கூடும் என்பதொன்றே என் நோக்கம். ஸாரநாதனிடம் இருப்பது ஓர் அபூர்வமான மனநோய். அதனை மேலும் ஆராய்ந்து காரணங்களையும் சிகிச்சை முறைகளையும் கண்டறிய விரும்புகிறேன். மேலும் இவன் கொலைகாரன் எனப் போலீஸார் கருதுவதால் இவனைத் தகுந்த டாக்டரிடம் அழைத்துப் போகும் விஷயத்தில் அவர்கள் அலட்சியமாய் இருக்கக் கூடும்.''

பானர்ஜி இந்தச் சமயத்தில் துள்ளி எழுந்து, ஸாரநாதனின் வழக்கறிஞர் என்ற முறையில் டாக்டர் குஹாவின் கோரிக்கைக்கு மேலும் அழுத்தம் கொடுத்துப் பேசினார்.

''கைதியின் வழக்கறிஞர் சமர்ப்பித்துள்ள கோரிக்கையை நீதிமன்றம் ஆமோதிக்கிறது. போலீஸார் தக்க ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்று இந்நீதிமன்றம் உத்தரவிடுகிறது.'' இவ்வாறு கூறிவிட்டு நீதிபதி தமது தனி அறைக்குச் சென்றார்.

* * *

**டா**க்டர் குஹாவின் அறையில் ஒரு மேஜை. மண்ணும் எருவும் கலந்து பரப்பினால் தோட்டம் போடலாம்; அத்தனை விசாலமானது! ஆனால் அது அவ்வாறு பயன்படாமல், டாக்டர் குஹாவின் 'டை பின்'னில் இருந்த வைரத்தோடு போட்டி போட்டுக் கொண்டு பளபளத்தது. அதன் பின்னால் ஒரு நாற்காலி. அது சுழலும், முன்னும் பின்னும் சாயும், உயரும், தாழும், ரப்பர்ச் சக்கரங்களின் மீதாக 'விர்ர்' ரென்று ஓசையின்றி நகரும். ரப்பர் குஷன் வைத்து மிருதுவான தோலினால் மூடித் தைக்கப்பட்ட ஆசனம் அது. ஆபீஸில் மாம்பலகையால் செய்த நாற்காலியிலேயே உடலை அஷ்ட கோணலாக வளைத்துக்கொண்டு தூங்கும் திறன் படைத்த ஆசாமிகள் இதில் உட்கார்ந்து பார்க்க வேண்டும். ஓ! அப்புறம் கும்பகர்ணனை எழுப்பிய படலம்தான் நடக்க வேண்டியிருக்கும். ஏதோ தேன்கூட்டின் அருகில் இருக்கிறோமோ என்று நினைக்கும்படி அறையில் 'ஹூம்ம்ம்' என்று ஓர் ஓசை. குளுகுளு சாதனம் வழங்கும் தாலாட்டுத்

நன்றாக ஸ்தாபிக்கப்பட்ட

# AMCO

## ஆம்கோ பாட்டரியின் தரம்

உங்கள் வாகனத்தை
உற்சாகமாக ஓட்டுவதற்கு
ஓர் உத்திரவாதம்






சுமார் நாற்பது ஆண்டுகால பாட்டரி உற்பத்தி அனுபவமும், நவீன தொழில் நுட்ப அறிவும் கொண்டு தயாரிக்கப்படும் ஒவ்வொரு ஆம்கோ சில்வர் கோபால்டு பாட்டரியும் உங்கள் வாகனத்தை உற்சாகத்துடன் ஓட்டுவதற்கு உத்திரவாதம் அளிக்கின்றது.

கூடுதலான சக்தியைத்தரும் ஆம்கோ பாட்டரியே வேண்டுமென்று வற்புறுத்துங்கள், அது நீடித்து உழைக்கின்றது.

**ஆம்கோ பாட்டரீஸ் லிமிடெட்**
**பெங்களூர்-2**



## தலைவலி • ஃப்ளூ • பல்வலி • உடல்வலி முதலியவற்றை உடனடியாகக் குணப்படுத்த

# ஸலோஃபென்

## வலி நிவாரண மாத்திரை

ஏனெனில் ஸலோஃபென் மாத்திரைகள் டாக்டர்கள் சிபாரிசு செய்யும் மருத்துவ முறைப்படித் தயாரிக்கப்பட்டவை.

ஸலோஃபென்
இருக்குமிடத்தில்
வலி இருக்காது!

இது அமிர்தாஞ்சன்
கம்பெனியின்
தயாரிப்பு
அமிர்தாஞ்சன்
லிமிடெட்





தான் அது. முத்தைப் பொடி செய்து குழைத்துப் பூசியிருக்கிறார்களோ என்று எண்ணும்படி சுவர்களில் ஒரு வழவழப்பு, வெண்மை. டாக்டர் பெற்ற பட்டங்கள் பல அவற்றில் சட்டம் போட்டு மாட்டப் பட்டிருந்தன. போனால் போகட்டும் என்பது போல் ஒரே ஒரு இயற்கைக் காட்சிப் படத்துக்கும் இடம் இருந்தது. ஜன்னலை இளம் நீல நிறத்தில் 'வெனிஷியன் ப்ளைண்ட்' மறைத்தது. மங்கலான செயற்கை ஒளியை மறைவாகப் பொருத்தப் பட்டிருந்த டியூப் லைட் சிந்தியது.

அறையின் ஒரு பக்கத்தில் 'கௌச்'. அது கட்டிலுமல்ல; தொட்டிலுமல்ல. தாழ்வான, அகலமான, விசுப்பலகை போல்தான். ஆனால் ஒரு பக்கம் சற்று உயர்த்திக் கொள்ளலாம், சாய்ந்த நிலையில் படுக்க விரும்பினால். அதிலும் மென்மையான தோல் போர்த்திய ரப்பர் குஷனிங் நெடுகிலும் உண்டு.

அதில் படுத்தால்... ஐயோ! சுகமாவது சுகம்! ஆனால் பாவம், மன நோய் உள்ளவர்களுக்கு அதில் படுத்தாலும் சாந்தி கிடைக்காது. அதற்கு மேல் ஓர் ஊசியும் போடுவார் டாக்டர் குஹா. அவர்கள் உடலைத் தளர்த்தி, மனத்தை இலேசாக்கிப் பேச வைப்பார், கேட்பார் —இதுதான் அவர் சிகிச்சை முறை.

இந்த இடத்துக்கு வந்து, இத்தகைய சிகிச்சையைத்தான் கடந்த ஆறு மாதங்களாய்ப் பெற்று வந்தான் ஸாரநாதன். டாக்டர் குஹா அவனுக்கு ஒரு ஜோடி பைஜாமா — ஜிப்பா கூட வாங்கிக் கொடுத்தார். தம்மைக் காண வரும்போது அவன் சிறைச்சாலை உடைகளைக் களைந்துவிட்டு இவற்றை அணிந்து வரவேண்டுமெனப் பணித்தார்.

ஒரு முறை ''மார்னிங் நியூஸ்'' நிருபர் டாக்டர் குஹாவைப் பேட்டி கண்டு எழுதினார். பொதுவாக மனநோய் மருத்துவம் பற்றி அமைந்த பேட்டியின் இடையில் ஸாரநாதன் பற்றியும் சில வார்த்தைகள் சொன்னார் டாக்டர். அவன் பூரணமாகக் குணமடையவில்லை என்றாலும் அவன் நிலையில் அபிவிருத்தி காணப்படுவதாகக் கூறினார்.

வெறும் வாயையே மெல்லுகிற நிருபருக்கு அவல் கிடைத்தது போலாயிற்று இந்தச் செய்தி. மனநோய் மருத்துவம் பற்றிக் குஹா சொன்ன பல விஷயங்களை யெல்லாம் கழுத்தைப் பிடித்துப் பின்னால் தள்ளினார். ''ஸைக்கோ ஸாரநாதன் விடுதலை பெறுவானா?'' என்று பேட்டிக் கட்டுரைக்குத் தலைப்புக் கொடுத்தார். ஸாரநாதனின் மனநோய் குணமடைந்து வருகிறதென்றும் அவன் முழுமையாக சொஸ்தமடைந்து விட்டால் சமூகத்தில் அவன் ஒரு கண்ணியமான, நல்ல மனிதனாக வாழ முடியும் என்றும், அப்படி ஒரு நிலை உருவாகும்போது அவனைத் தொடர்ந்து சிறையில் வைத்திருப்பது சரியாகுமா என்ற சட்டரீதியான கேள்வி எழுகிறதென்றும் நிருபர் எழுதினார். அவன் ஒரு ஸைக்கோவாக இருந்தபோது செய்த தவறுகளுக்கு அவனைப் பொறுப்பாக்க முடியாது எனில், குணமடைந்து விட்டபிறகு அவனைப் போலீஸ் பாதுகாப்பிலிருந்து விடுவித்துவிட வேண்டியதுதானே முறை? என்ற வினாவை எழுப்பி யிருந்தார். மேலும் இதுபற்றிப் பிரபல வழக்கறிஞர் பானர்ஜியைக் கேட்டபோது அவர் இது விஷயமாகத் தாம் இப்போது ஒன்றும் சொல்வதற்கில்லை என்றும் யோசித்துச் சட்ட நுணுக்கங்களை ஆராய்ந்து பார்த்த பிறகே பதில் கூற முடியும் என்றும் தெரிவித்ததாக நிருபர் விவரித்திருந்தார்.

இதை யெல்லாம் படித்தபோது குஹாவுக்குச் சிரிப்பு வந்தது. 'இன்னும் முட்டையே இடவில்லை. அதற்குள் கோழிக் குஞ்சுகளை எண்ண ஆரம்பித்தாகிவிட்டது! நிருபரைக் குறைகூறி என்ன பயன்? ரொம்பக் கௌரவமான பத்திரிகைகள் என்று சமீப காலம்வரை கருதப்பட்டு வந்த தினசரிகளும் சஞ்சிகைகளுமே இப்படித்தானே இன்று 'ஸென்ஸேஷ'னைத் தேடிப் போகின்றன? ஆங்கிலமாகட்டும், பிராந்திய மொழிகளாகட்டும் எம்மொழிப் பத்திரிகைகளானாலும் ஸெக்ஸும் ஸென்ஸேஷனும்தான்!'

அந்நிருபர் ஒரு பரபரப்பை வாசகர்களிடையே ஏற்படுத்த வேண்டும் என்பதற்காக இப்படி எழுதியது எவ்வளவு பெரிய தவறு என்பது விரைவிலேயே தெரிந்து போய்விட்டது. ஏனெனில் இதே நேரத்தில் ஸாரநாதன் டாக்டர் குஹாவுக்கே 'குட்பை' சொல்லத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டிருந்தான்! (தொடரும்)

# புதுமையின் பொலிவுக்கு
# ஹமாம்




நாள்தோறும் ஹமாம் தேய்த்துக் குளியுங்கள். ஹமாம் தரும் நறுமணமுள்ள நுரை உங்கள் சருமத்தை சுத்தம் செய்வதுடன், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது. உங்கள் மேனிக்கு கவர்ச்சியான மெருகையும் ஊட்டுகிறது. நெடுங்காலம்...நீடித்திருக்கும் ஹமாம் டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்.

**அதிக காலம் நீடித்துழைக்கும் டாய்லெட் சோப்**

டாடா
தயாரிப்பு

CHTH-14-203 TAM



தேவநாதனைப் படிக்கவைத்து ஆளாக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட அவனுடைய ஒன்றுவிட்ட மாமா ராமாமிர்தம்தான் அவனுடைய கல்யாணப் பொறுப்பையும் தம் தோள் மேல் போட்டுக் கொண்டார். அந்த விஷயத்தில் அவருக்கு ஒன்றும் அதிக சிரமம் இல்லை. தேவநாதன் கெட்டிக்காரன். சிறு வயதிலிருந்தே படிப்பில் அசகாய சூரனாக விளங்கினான். எம். ஏ. பாஸ் செய்தவுடன் ஒரு நல்ல உத்தியோகம் தானாகவே தேடி வந்தது. கைநிறையச் சம்பளம். தன்னிடம் கல்யாணப் பேச்சை எடுத்தவர்களிடம் எல்லாம் அவன், 'ராமாமிர்தத்திடம் பேசுங்கள்' என்று கூறி அனுப்பி விடுவான். ''எனக்கு என் தகப்பனாரின் முகம் எப்படி இருக்கும் என்று தெரியாது. ஏழு வயதில் தாயாரையும் இழந்தேன். என்னை ஏற்று வளர்த்தவர் மிஸ்டர் ராமாமிர்தம். அவருக்கு நான் மிகவும் கடமைப் பட்டிருக்கிறேன்'' என்று அவன் தன்னுடைய ஆப்த நண்பர்களிடம் சொல்லுவதுண்டு.

தேவநாதனுக்குச் சுமதி என்று ஒரு தங்கை உண்டு. அவனை விட நாலு வயது சிறியவள். தேவநாதனின் தகப்பனார் சூறையாடியது போக எஞ்சியிருந்த கொஞ்ச நஞ்ச நிலபுலன்களைப் பணமாக்கிச் சுமதியின் திருமணத்தை ஓரளவு சுமாராக ராமாமிர்தமே நடத்தி முடித்துவிட்டார். சாதாரண இடம்தான். தேவநாதன் கல்லூரியிலிருந்து வெளிவரும் முன்பே இந்தக் கல்யாணம் நடந்துவிட்டது.



கல்யாணக் கதைகள் 10

# அப்பா இருக்கிறார்!



ஆகவே தேவநாதனுக்குப் பிக்கல் பிடுங்கல் இல்லை என்ற காரணத்தால் பல இடங்களிலிருந்து பெண்ணைப் பெற்றவர்கள் ராமாமிர்தத்தை முற்றுகை யிட்டார்கள். ராமாமிர்தமும் ஒரு நல்ல இடமாக, தேவநாதன் குணத்துக்கு ஏற்ற பெண்ணாக அமையட்டும் என்று பொறுமையுடன் காத்திருந்தார். முதல் சந்திப்பிலேயே அவருக்குக் கோபாலசாமியைப் பிடித்து விட்டது.

கோபாலசாமி ஓரளவு வசதியுள்ள நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தவர். அவர் பெண் வாணி பி. எஸ்ஸி. பட்டம் பெற்று ஒரு வியாபார நிறுவனத்தில் வரவேற்பாளராகப் பணியாற்றி வந்தாள். அடக்கமான பெண். கோபாலசாமி இரண்டு வருடங்களாகவே அவள் திருமண விஷயமாகத் தீவிர முயற்சியில் ஈடுபட்டிருந்தார். தேவநாதனைப் பற்றிய தகவலும் அவருக்கு எட்டியது. பையனைத் தூர இருந்து அவனுக்குத் தெரியாமல் கவனித்தார். ராமாமிர்தத்தைப் பற்றியும் விசாரித்துத் தெரிந்து கொண்டார். ஒரு நல்ல நாளில் ராமாமிர்தத்தைச் சந்தித்தும் பேசினார்.

''மிஸ்டர் கோபாலசாமி! பையனை விலை பேச வேண்டும் என்ற நோக்கத்தோடு அவனை நான் மனிதனாக்கவில்லை; வளர்க்கவில்லை. எனக்கு வசதி இருந்தது செய்தேன். தேவநாதனின் தாயார் அந்த நாட்களில் வெகு சிரமப்பட்டவள். தேவநாதனுக்கு நினைவு தெரிவதற்கு முன்பே அவன் அப்பன் வீட்டில் சண்டை போட்டுக் கொண்டு ஓடிவிட்டான். அதற்குள் தன்னால் முடிந்தவரை குடும்பச் சொத்தைச் சூறையாடி அழித்துவிட்டு, குடிகாரன், சூதாடி என்ற கெட்ட பெயர்களை எல்லாம் சம்பாதித்துக் கொண்டான். இன்று வரை அவன் எங்கிருக்கிறான் என்று எங்களுக்குத் தெரியாது. தெரிந்து கொள்ள முயற்சி செய்யவும் இல்லை. அதே கவலையால் தேவநாதனின் அம்மாவும் போய்விட்டாள். இப்போது தேவநாதன் காலை ஊன்றிக் கொண்ட பிறகு அவன் தந்தை வழி தூரத்து உறவினர்கள் வலிய வருகிறார்கள். தாய் வழியில் நான் ஒருவன் தான். பொறுப்பும் என்னுடையதுதான். உங்கள் உசிதம்போல் கௌரவமாகக் கல்யாணத்தை நடத்திவிடுங்கள். பையனைப் பற்றி உங்களுக்கு நன்கு தெரிந்திருக்க வேண்டும் என்பதற்காக மனம் விட்டுச் சொல்கிறேன். அவன் அப்பாவின் வாசனை தேவநாதன் மீது கொஞ்சமும் வீசாது என்பதற்கு என்னால் உறுதி கொடுக்க முடியும். ஆகவே உங்கள் மனமும் திருப்தியானால் இந்தத் திருமணத்தை முடித்து விடலாம். தேவநாதனின் அப்பா பற்றிய பேச்சை அவனிடம் நீங்கள் எடுக்கவே கூடாது'' என்றார் ராமாமிர்தம்.

''எனக்குப் பூர்ண சம்மதம்'' என்று கச்சிதமாகப் பதில் சொல்லி விட்டார் கோபாலசாமி.

கல்யாணத்துக்கு இருபது நாட்கள் இருக்கும்போது ராமாமிர்தத்துக்கு ஒரு திடீர் யோகம் அடித்தது. அவர் மாநில சர்க்காரில் ஒரு பொறுப்பான உத்தியோகத்தில் இருந்தார். அவருடைய இலாகாவின் சார்பில் அவர் ஒரு வெளிநாட்டுப் பிரயாணத்தை மேற்கொள்ள வேண்டியிருந்தது. மேற்கு ஐரோப்பிய நாடுகளில் மூன்று மாதகாலம் சுற்றுப் பயணம். இந்தப் பயணத்தை அடுத்த ஆண்டில்தான் ராமாமிர்தம் எதிர்பார்த்திருந்தார். ஆனால் அது சீக்கிரமே ஏற்பாடாகி விட்டது. அடுத்த வாரமே அவர் கிளம்பியாக வேண்டும். அவருடைய மனைவியும் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு கிளம்பத் தயாராகி விட்டாள்.

விஷயமறிந்த கோபாலசாமி பதற்றத்துடன் ராமாமிர்தத்தைப் போய்ப் பார்த்தார். ''மிஸ்டர் கோபாலசாமி! எங்களுக்காகக் கல்யாண முகூர்த்தத்தைத் தள்ளிப் போடவேண்டும் என்ற பேச்சே வரக்கூடாது. திருமணம் குறிப்பிட்ட நாளில் நடக்கட்டும். எங்கிருந்தாலும் எங்கள் மானசீகமான ஆசீர்வாதம் உண்டு. இது பற்றி நான் தேவநாதனிடம் விரிவாகப் பேசிவிட்டேன். அவன் ஒப்புக்கொண்டு விட்டான். பலவிதமான உறவுக்காரர்கள் வருவார்கள். உங்களுக்குத்தான் பொறுப்பு அதிகம்'' என்று ராமாமிர்தம் முத்தாய்ப்பு வைத்து விட்டார். ஒரு வாரத்துக்குப் பின் மனைவி சகிதம் விமானமும் ஏறிவிட்டார்.

கோபாலசாமி நகரத்தில் வசதியான ஒரு கல்யாண மண்டபத்தையே ஏற்பாடு செய்திருந்தார். இட வசதி நிறைய இருந்தது. பிள்ளை வீட்டார் மாடியில் தங்கலாம். பெண் வீட்டாருக்குக் கீழே இடம். திருமணத்துக்குப் பெரிய ஹால்.

திருமணத்துக்கு முதல் நாள் உறவினர்கள் குழுக்கள் குழுக்களாக மண்டபத்துக்கு வெளியூர்களிலிருந்து வந்து சேர ஆரம்பித்தார்கள். அவர்களில் தேவநாதனின் சகோதரி சுமதியும்



அவன் கணவன் மாதவனும் முக்கியமான வர்கள். கிராமாந்தர தாலுக்கா ஆபீசில் மாதவனுக்குக் குமாஸ்தா வேலே. நண்டும் சிண்டுமாக இரண்டு மூன்று குழந்தைகள்.

பெண்ணுக்கு என்னென்ன நகைகள், எத்தனை எத்தனை சவரன், பாத்திரங்கள் எவ்வளவு என்றெல்லாம் மாதவன் கேட்டதோடு ஒவ்வொன்றையும் கையில் எடுத்து எடை பார்ப்பதிலும் ஆர்வம் காட்டினுன். இந்தச் செயல்கள் நாகரிகக் குறைவாகத் தோன்றியது கோபாலசாமிக்கு. ஆனுலும் சிரமப்பட்டுப் பொறுமையைக் கடைப்பிடித்தார். தாலி கட்டி முடியும்வரையில் வாயைத் திறக்கக் கூடாது என்று உறுதி செய்து கொண்டார். பெரியவர் ராமாமிர்தம் இல்லே என்ற நிலேயில் மாதவன், தானே பிள்ளே வீட்டார்களில் பிரதான நபர் என்ற பதவியை ஏற்றுக் கொண்டான். அவனே ஆமோதிக்க ஒன்றிரண்டு கிழவனுர்கள் சேர்ந்தார்கள். தேவநாதனே சுமதியோ வாயைத் திறக்கவில்லே. ஜானவாசத்தின்போதே மாதவன் ஒன்றிரண்டு சந்தர்ப்பங்களில் தன்னுடைய பெரிய மனித ஹோதாவை விளம்பரப் படுத்த முயன்ருன். ''இதென்னய்யா மாலே வாங்கியிருக்கானுக மாப்பிள்ளேக்கு! இரண்டு சரத்தைச் சேர்த்து மாலேன்னு சொன்னு நம்ப முடியுமா?... வசதியில்லேன்னுத் தனக்குத் தகுந்தாற்போல் சம்பந்தத்துக்கு இடம் தேடணும். எங்க தேவநாதன் தானு அகப்பட்டான்?'' என்று கோவிலிலேயே போர்க் குரல் எழுப்பினுன்.

இரவு பத்து மணி இருக்கும். மாதவன் வேகமாக மாடிப் படி வழியாக இறங்கி வந்தான். ''சார்! அர்ஜண்டா ஒரு ஜிஞ்சர் பீர் வேண்டும்'' என்ருன் கோபாலசாமியைப் பார்த்து.

அங்கே உடனே வெளியே அனுப்பும்படி சிறுவர்களோ, வேலேக்காரர்களோ இல்லே. அவர்கள் பின்னுலே சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். ''நீங்க மேலே போங்கோ! நான் இதோ வாங்கிவர ஏற்பாடு செய்கிறேன்'' என்ருர் கோபாலசாமி.

மாதவன் போகவில்லே. முறைத்தான். ''அவசரம் என்ருல் என்னவோ சர்வ அலட்சியமாக ஆபீஸ் கடுதாசி எழுதற மாதிரி பேசுகிறீர்களே! நீங்கதான் போய் ஒரு பாட்டில் வாங்கி வாருங்களேன்! ஏற்பாடு என்ன ஏற்பாடு'' என்று சீறி வெடித்தான்.

கோபாலசாமிக்கு முகம் குப்பென்று சிவந்தது. குரலேக் கட்டுப்படுத்திக் கொண்டார். ''மிஸ்டர் மாதவன்! அவசரம் உங்களுக்கு. தெரு முனையில் கடை இருக்கிறது. நீங்களே போய் வாங்கிக் கொள்ளலாம்'' என்று பதற்றமில்லாமல் சொல்லிவிட்டு ஒன்றுமே நடக்காதது போல் சமையல்காரரிடம் பால் கணக்கைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்.

மாதவன் கடைக்குப் போகவில்லே. இரண்டு இரண்டு படிகளாகத் தாண்டி மாடிக்குப் போனுன். சில நிமிடங்களில் மேலே ஒரே ஆரவாரம். இருபது பேர்கள் ஒரே நேரத்தில் பேசும் கூச்சல். கோபாலசாமி தம் பையன் பாபுவை மேலே போய் விசாரிக்கும்படி அனுப்பினுர்.

பாபு மேலே போன இரண்டாவது நிமிடம் மாதவனின் குரல் ஒலிபெருக்கி மூலம் கேட்பது போல ஒலித்தது. ''நீ யாரு கேட்பதற்கு? பெண்ணைப் பெற்றவனே இங்கே வந்து பேசச் சொல்லு. எங்களுக்கும் மான ரோஷம் உண்டு. கண்டவனுேடு பேசத் தயாரில்லே'' என்ருன் மாதவன்.

கோபாலசாமி எழுந்தார். தம்மை மறந்தார்; பொறுமையை இழந்தார். மாடிப் படி ஏறிப் பாதித் திருப்பத்தில் நின்று ''டேய் பாபு! நீ வாடா! பிள்ளேயைப் பெற்றவனேக் கூட்டி வரச் சொல்லு. நான் பேசிக் கொள்கிறேன். தண்டச் சோறு கொட்டிக்க வந்தவங்ககிட்ட நான் பேசத் தயாரில்லே என்று சொல்லு'' என்று சொல்லிவிட்டுக் கீழே வந்துவிட்டார். பாபுவும் இறங்கி வந்து விட்டான்.

சில நிமிடங்கள் ஒரே அமைதி, மௌனம். அதைத் தொடர்ந்து கையில் பெட்டியுடனும் தோளில் ஒரு குழந்தையுடனும் மாதவன் இறங்கி வந்தான். பின்னுல் சுமதி ஒரு குழந்தையுடன் வந்தாள். தொடர்ந்து நாலேந்து பேர்கள் இறங்கினுர்கள். கடைசியில் தேவநாதனும் வந்தான். கோபாலசாமியை நெருங்கி, ''சார், மன்னிக்கணும்! மிஸ்டர் ராமாமிர்தம் வந்த பிறகு மேற்கொண்டு பேசிக்கொள்ளலாம். இப்போதைக்கு நான் மேற்கொண்டு ஒன்றும் செய்வதற்கில்லே'' என்ருன்.

ஒரே நிசப்தம். கீழே பெண் வீட்டார்கள் சிலேயாக நின்ருர்கள். மாடியிலிருந்து பிள்ளே வீட்டார்கள் இறங்கிக் கொண்டே யிருந்தார்கள். கோபாலசாமிக்கு என்ன செய்வது, என்ன பேசுவது என்றே தெரியவில்லே.

அப்போதுதான் எதிர்பாராத ஒரு திருப்பம் நிகழ்ந்தது. பின்கட்டு வாசற்படியில் நின்று கவனித்துக் கொண்டிருந்த பிரதான சமையற்காரர் மாதவனே ஒட்டி நின்றுகொண்டிருந்த கிழவனுரை நோக்கி வந்தார். ''ஏன்யா! நீர் மாங்குடி ஐயாசாமிதானே? சுந்தரேசன் மைத்துனன்!... சௌக்கியமா இருக்கிறீரா?... கல்யாணங்களேக் கலேத்து வயிற்றெரிச்சல் கொட்டிக் கொள்வது என்ருல் உமக்கு ஜாங்கிரி சாப்பிடற மாதிரி ஆச்சே!...'' என்ருர் சிரித்துக்கொண்டே.

நடந்தவர்கள் நின்றுவிட்டார்கள். மாதவன் சமையற்காரரை முறைத்தான். மாங்குடி ஐயாசாமி, ''நீ யாருடா அதிகப்பிரசங்கி?... பெரிய மனுஷங்க நடுவிலே உனக்கு என்ன வேலே?'' என்ருர் விறைப்பாக.

''ஐயாசாமி! இந்த மாப்பிள்ளேப் பையன் அனந்தராமன் பிள்ளேதானே?... அனந்தராமன் அந்தக் காலத்தில் உமக்கு அவசரத்துக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்கலேங்கறதுக்காக இப்போ அவன் பிள்ளே கல்யாணத்துக்கு வேட்டு வைக்கிறீரா?... இந்தப் பையன் அனந்தராமன் மாப்பிள்ளேதானே?...இவனே எப்படி வளேச்சுப் போட்டீர்?... ஓ! புரிகிறது. இவன் அப்பா நாகநாதனும் நீரும் குத்தாலத்திலே சதுர்க்கச்சேரிகளே ரசித்தவர்களோல்லியோ!'' என்று சொல்லிக்கொண்டே தேவநாதன் கிட்டே போய் அவன் கைகளேப் பிடித்துக் கொண்டார். ''மாப்பிள்ளே சார்!

## குடும்பங்களின் பேராதரவு பெற்றது

# லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ

நல்லதோர் தேயிலேயிடம்
நீங்கள் கோரும்
அனைத்தையும் அளிக்கிறது




பாக்கிங் செய்த தேயிலே மட்டுமே
புதிதாகவும், மணத்துடனும் திகழ்கிறது

LHGC-12-72 TAM

# க்ருஷன் எந்த வயதிலும் உங்களை ‘இளமையோடு’ இருக்கச் செய்கிறது






க்ருஷன் ஆறு முக்கிய மானதாது உப்புக் களின் சேர்க்கை-இது :

- மூத்திரப்பைகளைக் கழுவுகிறது
- ஈரலை நன்றாக இயங்கச் செய்கிறது
- இரத்தத்தை சுத்த மாக்க உதவுகிறது
- மலச்சிக்கல் அகல உதவுகிறது
- ஜீரண சக்தியைப் பெருக்குகிறது
- பசியெடுக்க வைக் கிறது
- மூட்டு வலிகளை அகற்றுகிறது

**க்ருஷன்**

சாப்பிட்டு இளமையுடன் இருங்கள்.

KS.G.16. TM




சென்னை, டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனி லிமிடெட்டைச் சார்ந்த ஸ்ரீ பி. எஸ். ராமனுத் அவர்கள் குமாரத்தி சௌ. பி. ஆர். சீதா B. A.,க்கும், ஃபரூக் கல்லூரியைச் சார்ந்த பௌதிகப் பேராசிரியர் ஸ்ரீ என். ஜி. வைத்தியனுதன் M. SC., அவர்கள் குமாரர் சிரஞ்சீவி என். வி. தேவேசன் என்கிற மணி B. SC., (Eng.)க்கும் சமீபத்தில் பாலக்காட்டில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்


# மூல நோயை

முற்றவிடாமல் நம்பிக்கையான

## ஹெடன்ஸா

களிம்பு உபயோகித்து நிவாரணம் அடையுங்கள்;

—ரண சிகிச்சையையும் தடுங்கள்

Bensons-2141 TAM

உங்க மேலே குற்றம் இல்லே. இந்த ஐயாசாமி இப்படித்தான் விஷமம் பண்ணுவார். உங்க தங்கை புருஷனுக்கு வேப்பிலே அடிச்சிருக்கார். நான் உங்க ஊர்ப் பக்கங்களிலே எத்தனையோ கல்யாணங்களுக்குச் சமையல் செய்திருக்கிறதாலே இந்த விஷயங்களெல்லாம் தெரியும். இப்பவே கோபாலசாமி சார் ஒரு கேஸ் ஜிஞ்சர்பீர் பாட்டில் அனுப்பி வைப்பார். எல்லோரும் மாடிக்குப் போங்கோ! காலம்பற சீக்கிரம் முகூர்த்தம்'' என்று சொல்லிக் கொண்டே வாயிற்பக்கத்தை மறைத்தாற்போல் நின்றுகொண்டார்.

முதலில் மாடியை நோக்கித் திரும்பியவர் ஐயாசாமிதான்! அவருக்குப் பயம், இந்தச் சமையற்கார திடீர் பூதம் இன்னும் எதையாவது சொல்லி வைக்குமோ என்று. அந்தச் சமையற்காரர் யார் என்றும் சட்டென்று ஞாபகம் வரவில்லை. மாதவன் பின்தொடர்ந்தான். கடைசியில் படியேறிய தேவநாதன், சமையற்காரரைப் பார்த்து, 'தாங்க்ஸ் சார்' என்று சொல்லிவிட்டுப் போனான். கோபாலசாமியின் கண்களுக்குச் சமையற்காரர் நளமகாராஜனைப் போல் அச்சமயம் தோன்றினார். அவரை அப்படியே ஆலிங்கனம் செய்து கொண்டார்.

மறுநாள் முகூர்த்தம் அமர்க்களமாக நடந்தது. முதல் நாள் இரவு நடந்த நிகழ்ச்சிகள் யார் மனத்திலும் நிற்கவில்லை.

திருமணத்துக்கு மறுநாள் மாலை சமையற்காரர் பணம் வாங்கிக்கொள்ள வந்தார். கோபாலசாமி தம் நன்றியைத் தெரிவித்த, ஒரு நூறு ரூபாய் நோட்டைக் கூடவே வைத்தார். ஆனால் அது கைமாறவில்லை. சமையற்காரர் அதை வாங்கிக்கொள்ளத் திட்டவட்டமாக மறுத்து விட்டார்.

''நான் உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும் என்று விரும்புகிறேன்'' என்றார் சமையற்காரர் ராமு. ''உங்கள் மாப்பிள்ளையின் தகப்பனாரை எனக்குத் தெரியும் என்று சொன்னேன். சந்தர்ப்பக் கோளாறினால் குடும்பத்தைத் துறந்து ஓடினார். கெட்டலைந்தார். ஆனால் சீக்கிரமே மனம் திருந்திச் சிறந்த உழைப்பாளியாக மாறினார். அவருக்கு ஒரு வைராக்கியம்; மறுபடியும் எதற்காகவும் அந்தக் குடும்பத்துடன் தொடர்பு கொள்வதில்லை என்று. அவரை இப்போது நெருங்கிய உறவுக்காரர்கள் பார்த்தாலும் அடையாளம் கண்டுகொள்ள முடியாது. இரண்டாவது உலகப் போரிலே குண்டடி பட்டு, ஆபரேஷன் எல்லாம் அனுபவித்து ஆளே மாறிவிட்டார். எதுக்குச் சொல்றேன்னா உங்க மாப்பிள்ளை தங்கமானவன் என்றாலும் ஒரு தறுதலையின் பிள்ளைக்கு நம் பெண்ணைக் கொடுத்திருக்கோமே என்ற உறுத்தல் உங்க மனசிலே இருக்கலாம். அதையும் நீக்கிடலாமென்றுதான் இந்த விஷயத்தைச் சொன்னேன்.'' ராமு விடைபெற்றுக் கிளம்பினார்.

கோபாலசாமி பரம நிம்மதியும், சந்தோஷமும் அடைந்தார். பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்த சமையற்காரர் ராமு நினைத்துக்கொண்டார்: ''நல்ல வேளை வாய் தவறி இந்த மனிதரிடம், 'நான்தான் தேவநாதனின் தகப்பனார் அனந்தராமன் என்ற ராமு' என்று சொல்லாமல் இருந்தோமே'' என்று!

(சம்பவங்கள் உண்மை; பெயர்கள் மட்டுமே மாற்றப்பட்டுள்ளன.)

பன்னிரண்டாம் நூற்றாண்டில் நராங் கவிக் என்னும் சீனப் பேரரசர் தமது அரண்மனையில் ஒரு சமயம் சிலருக்கு விருந்து அளித்தார். விருந்தில் படைக்கப்பட்ட சுவையுள்ள ஒரு வகைக் குழம்பை மெச்சி விருந்தாளிகளில் ஒருவர், 'இது என்ன குழம்பு?' என்று கேட்டார். 'குருவிக் கூடு குழம்பு' என்று மன்னர் கூறக் கேட்டு அவ்விருந்தினர் வியந்தார்.

## உமிழ்நீர்க் கூடு

தென் பர்மாவின் கடற்கரையை அடுத்த தீவுகளில் குறிப்பிட்ட ஓரினத்தைச் சேர்ந்த நெய்க் குருவிகள் இக்கூடுகளைக் கட்டும். மற்றப் பறவைகளைப் போல் குச்சி, புல், நார் முதலியவற்றால் கூடு கட்டுவதில்லை இப்பறவைகள். தங்கள் உமிழ் நீராலேயே இவை கூடுகளை அமைக்கின்றன. காற்றுப் பட்டால் இவற்றின் உமிழ் நீர் கெட்டியாகிவிடும். இரண்டு மூன்று அங்குல விட்டம் உள்ள அழகிய கிண்ணக் கூடு இதனால் உருவாக்கப்படுகிறது. இந்தக் கூடுகளை வேக வைத்துக் குழம்பு தயாரித்தால் மிகவும் சுவையாக இருக்குமாம்!

மிக உயரமான பாறை இடுக்குகள், குகைகள் போன்ற இடங்களில் அமைக்கப்படும் இக்கூடுகளைச் சேகரிப்பது எளிதல்ல. ஆனால் சிரமப்பட்டு எடுத்தால் நல்ல விலை போகும். - பத்மா ராஜகோபால்



# மஸூத் 7 மாதங்களில் நிற்க ஆரம்பித்து விட்டான் —முன்னணி வீரன்!

மஸூத் எப்போதும் முன் காலில் நிற்கிறான். புதுப் புதுப் பொருள்களை எட்டிப்பிடிக்க எப்போதும் ஆவல். உணருவதில், கற்றுக் கொள்வதில்.., வளர்வதில்...எதிலுமே வேகம். இசையிலே கூட நாட்டமிருக்கிறது—காலால் தாளம் போடுகிறான்! இந்தப் படுசுட்டியின் இரகசியம் ஒரு விசேஷமான குழந்தை உணவு.

ASP/AS-17



## மஸூத் அருந்துவது அமுல்ஸ்ப்ரே —முன்னணிக் குழந்தை உணவு

அறிமுகப்படுத்திய இரண்டாண்டுகளுக்குள்ளேயே உச்ச-விற்பனையை எய்திய அமுல்ஸ்ப்ரேயின் துவக்கமே படு வேகம். அது ஒரு விசேஷமான செய்முறைப்படி, விசேஷ முறையில் (ஸ்ப்ரே டிரையிங்) ஆக்கம் பெற்றது—உங்களுடைய அருமைக் குழந்தைக்காக. சீரணிக்க எளிதான அமுல்ஸ்ப்ரே ஒரு சரி விகித சத்துணவு. குழந்தைகளின் சீரான வளர்ச்சிக்கு அவசியமான வைட்டமின்கள், தாதுப் பொருள்கள், அதிக அளவிலே தரமான புரதம் யாவும் கொண்டது.




**இலவசம்**

அமுல் குழந்தை நூலை இலவசமாகப் பெற (50 பைசே தபால் தலையுடன்) எழுதுக: தபால் பை 10124, பம்பாய்-1.

## அமுல்ஸ்ப்ரே

**தாய்ப் பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது**

# பட்னகர் பரிசு பெற்ற கல்யாணராமன்

பௌதிகம், விஞ்ஞானம், மருத்துவம் முதலிய துறைகளில் ஆராய்ச்சிகள் செய்து புதிய கண்டுபிடிப்புக்களை உருவாக்கும் அறிஞர்களுக்கு சாந்தி ஸ்வரூப் பட்னகரின் பெயரால் பாரத அரசு பதினாயிரம் ரூபாய் வழங்கிக் கௌரவிக்கிறது. நோபெல் பரிசுக்குத் தகுதியுள்ளவர்களின் பெயர்கள் சிபாரிசு செய்யப் பெறுவதே போன்று, இப்பரிசு பெறுவதற்குத் தகுதியுள்ள விஞ்ஞானிகளின் பெயர்களைப் பல்கலைக் கழகங்கள் போன்ற நிறுவனங்கள் பரிந்துரைப்பது வழக்கம். 1969ம் ஆண்டுக்குச் சென்னை அரசினர் பொது மருத்துவ மனையில் பணியாற்றும் மூளைச் சிகிச்சை நிபுணர் டாக்டர் எஸ். கல்யாணராமன் இப்பரிசுக்குரியவரெனத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார் என்பதை அறிந்து தமிழ்நாடு பெருமைப்பட வேண்டும்.

டாக்டர் கல்யாணராமன் மருத்துவத் துறையில் பாரதத்திலும் இங்கிலாந்திலும் பெற்றுள்ள பட்டங்களை எழுதினால் அஃதோர் நீண்ட பட்டியலாக அமையும். டாக்டராக 'பிராக்டீஸ்' செய்து கொண்டு ஆராய்ச்சியிலும் ஈடுபட்டு வெற்றி கண்டு, பட்னகர் பரிசு பெற்றுள்ள முதல் டாக்டர் இவரே.

காக்காய் வலிப்பு (Epilepsy) புற்றுநோய் - இவை கண்டவர்கள் வலி பொறுக்க முடியாது துடிக்கும்படி நேரிடக்கூடும். காக்காய் வலிப்புக்காக ஏற்படும் இழுப்பை, 100க்கு 95 பேருக்கு மருந்தின் மூலம் குணப்படுத்தி விட இயலும். மீதி 5 சதவிகிதம் நோயாளிகளுக்கு அறுவைச் சிகிச்சை இன்றியமையாததாகிவிடுகிறது. சில சந்தர்ப்பங்களில் புற்றுநோயினால் ஏற்படும் வலியை எந்த மருந்தினாலும் குணப்படுத்த முடிவதில்லை. அறுவைச் சிகிச்சையின் மூலம் தான் குணப்படுத்த முடியும்.



வலியைப் போக்க, மூளையில் ஓர் உயிரணுவை (Cell) இயக்கமற்றதாக அல்லது மரத்துப் போகும்படி செய்ய வேண்டும். மூளையில் ஓர் ஆபரேஷன் செய்ய வேண்டுமாயின் மண்டை ஓட்டைத் திறக்க வேண்டிய இடத்தில் சுற்றிலும் பல துவாரங்கள் போட்டு ஒரு பெட்டியின் மூடியைத் திறப்பது போல் மண்டையோட்டினைத் திறக்க வேண்டும். இம் முறையைக் கையாளும்போது நோயாளிக்கு இரத்தச் சேதமும், உபாதையும் அதிகம் ஏற்படும். கடந்த இருபதாண்டுகளாக 'ஸ்டீரியோ டாக்ஸிக் ஸர்ஜரி' என்ற சிகிச்சை முறை அறுவைச் சிகிச்சையாளர்களால் கையாளப்பட்டு வருகிறது. இச்சிகிச்சை முறையைக் காக்காய் வலிப்பு புற்றுநோய், இவற்றின் வலியைப் போக்குவதற்குக் கல்யாணராமன் கையாண்டு வெற்றி கண்டுள்ளார். இப்புதிய முறைப்படி நோயாளியின் மண்டையில் ஒரு பெட்டி போன்ற சாதனத்தைப் பொருத்தி, மண்டையில் ஒரு சிறு துவாரம் மட்டுமே செய்து அதன் வழியே ஒரு மைக்ரோ எலெக்ட்ரோட் (டங்ஸ்டன் கம்பி) செலுத்தி மூளையின் குறிப்பிட்ட உயிரணுவை மின் சக்தியால் எரித்து (Cauterise) அதனை உணர்ச்சி யற்றதாக்குவதன் மூலம் வலி உபாதையைப் போக்கி விடுகிறார்கள். மூளையின் குறிப்பிட்ட எப் பகுதியினை ஆபரேஷன் செய்ய வேண்டும் என்று கண்டுபிடிக்க இது பெரிதும் பயன்படுகிறது. வலியைப் போக்க மண்டையோட்டினைத் திறக்க வேண்டிய அவசியமே இல்லாமற் போய் விடுகிறதல்லவா? இதில் டாக்டர் கல்யாணராமன் ஆராய்ச்சி செய்து அடைந்த வெற்றி ஏராளமான நோயாளிகளுக்குப் பெரிதும் பயன்படும்.

'பார்க்கின்ஸனிஸம்' (Parkinsonism) என்பது ஒரு வியாதி. கை உதறல் எடுத்து நடுங்கிக் கொண்டேயிருக்குமே — அது பார்க்கின்ஸனிஸம். இந்நோய் கண்டவருக்கு மூளையில் ஆபரேஷன் செய்யும்படி இருக்கும். முன்பெல்லாம் மூளையின் ஒரு பக்கத்து அறுவைச் சிகிச்சையை நிகழ்த்திவிட்டுப் பின்னர் சில மாதங்களுக்கெல்லாம் மீண்டும் ஒரு முறை மறு பக்கத்தில் ஆபரேஷன் செய்வது வழக்கம். இப்பொழுது ஒரே சமயத்தில் இரு பக்கங்களிலும் ஆபரேஷன் செய்து முடித்து விடுகிறார், டாக்டர் கல்யாணராமன். இதன்பயனாக, வெளியூரிலிருந்து சென்னைக்குச் சிகிச்சைக்கென வருவோருக்குச் செலவும் சிரமமும் பாதியாகக் குறைகின்றன.

எடின்பரோவில் டாக்டர் கல்யாணராமன் ஸ்டீரியோ டாக்ஸிக் அறுவைச் சிகிச்சையில் ஏற்கனவே ஆராய்ச்சிகள் நிகழ்த்தி அதற்கென 1964ல் டாக்டர் (பிஎச்.டி.) பட்டம் பெற்றுள்ளார். இந்தியாவிலேயே இத்துறையில் ஆராய்ச்சி செய்து வெற்றி ஈட்டி பிஎச். டி. பட்டம் பெற்றுள்ள முதல் மருத்துவர் இவரேயாவார். 1963 முதல் '68 வரையில் இவர் நிகழ்த்திய ஆராய்ச்சிகளின் பயனாகப் பல நோயாளிகளின் வேதனை நீங்கியுள்ளது. 1972ல் பட்னகர் பரிசு இவரைத் தேடி வந்தது அவ்வெற்றியின் ஒரு சின்னம்.

– பாணன்

# 7. போரில் வென்றோம்; இதயங்களையும் வென்றோம்!

சென்ற அத்தியாயத்தில் இந்திய ராணுவம் செயல் பட்ட முறையைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தேன். நம் படைகள் ஊர் ஊராகச் சுற்றி வளைத்து முன்னேறியது ஒரு முக்கிய அம்சம் என்றால் பாகிஸ்தான் ராணுவத்தின் முட்டாள்தன மும் மிகவும் குறிப்பிடத்தக்கது. இந்தியா எக்காலத்திலும் வங்க தேசத்துக்குள் நுழையாது என்று பாகிஸ்தான் தளபதி எண்ணித்தான் தம் படைகளைச் சிதற விட்டு விட்டார். நிராயுதபாணிகளை விரட்டவோ அல்லது அவர்களைக் கொடுமைப்படுத்தவோ பாகிஸ்தான் ராணுவம் அவ்வளவு ஆர்வம் காட்டியிருக்க வேண்டாம். ராணுவத்தின் அட்ட காசம் கட்டுக்கடங்காமல் போன பிறகு அதைத் தடுத்து நிறுத்தவோ ராணுவ தந்திரம் என்ற ஒன்றைக் கடைப் பிடிக்கவோ ராணுவம் முயலவில்லை.

வங்க தேசத்தில் உள்ள ராணுவம் டாக்கா, ஜெஸ்ஸோர், கொமில்லாவிலிருந்து கிளம்பி எல்லைப் பகுதிகள் வரையில் வந்த பிறகு அவை அங்கிருந்து பின்வாங்குவது அவ்வளவு துரித

போர் நிகழ்ந்த காலத்தில் கராச்சிக்கருகே தனது கடமைகளை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு திரும்பும் இந்திய ஸப்மரீன்.




மாக இல்லை. தவிர வங்க தேசத்தின் ராணுவ கேந்திரங்களிலும் ஆள் குறைவு ஏற்பட்டது. வியூகம் வகுத்து யுத்தம் நடக்கப் போகிறது என்று எதிர்பார்த்த பாகிஸ்தான் ராணுவத் தலைவர்கள் ஏமாந்தார்கள். சென்ற உலக மகா யுத்தத்தில் பிரான்ஸ்-ம் இம்மாதிரி முட்டாள்தனத்தைச் செய்தது. மகினோ கோடு என்பது எல்லை நெடுக உள்ள பாது காப்பு ஏற்பாடுகள். மின்சாரம் செலுத்தப் பட்ட முள்கம்பி வேலிச் சுவர்கள், அவை களுக்குப் பின்னால் அகழிகள், அவைகளுக்குப் பின்னால் டாங்கிகள், பீரங்கிகள் இத்தியாதி. ஹிட்லரின் படைகள் என்ன செய்தன? இவை களைக் கொஞ்சம்கூடச் சட்டை செய்யாமல் எங்கெங்கு இடுக்குகள் உண்டோ அவற்றின் மூலம் புகுந்து ஜாம் ஜாம் என்று முன்னேறிப் பாரிஸை அடைந்தன.

இந்திய ராணுவத்துக்குத் தோள் கொடுத்தவை இந்திய ஆகாய விமானப் படையும் இந்தியக் கப்பற் படையும். முன்பே பாகிஸ்தானின் ''உயர்ந்த விமான மனப்பான்மை'' அதற்குக் குழி பறித்தது. ''நம் மிராஜ், ஸேபர் விமானங்க ளுக்கு முன் இந்திய 'நாட்' எலிக் குஞ்சுகள் எம்மாத்திரம்?'' என்ற மமதை காரணமாகக் கிழக்கே விமானப் படை மறைந்தே போயிற்று. ஸேபர்களுக்கு எப்படிக் கடுக்காய் கொடுப்பது என்பதை நன்கு கற்றுக்கொண்டு விட்டார்கள் இந்திய விமானிகள்!

ஸேபர் விமானத்தில் உஷ்ணத்தைத் தேடிக் கொண்டு போய் எதிரி விமானத்தை நாசம் செய்யும் (Side Winder) அஸ்திரங்கள் உண்டு. ஆகாயச் சண்டையில் இந்த அஸ்திரத்துக்கு எந்த விமானமும் தப்பாது என்பது விஞ்ஞான தத்துவம். ஆனால் ஒவ்வொரு விதிக்கும் விலக்கு உண்டல்லவா? அதை இந்திய விமானிகள் நன்கு கற்றுக் கொண்டிருந்தார்கள்.

ஸேபர் விமானத்துடன் சண்டையிட்ட பிறகு 'நாட்' விமானங்கள் கீழே செங்குத்தாகச் சில ஆயிரம் அடிகள் இறங்கித் துரிதமாக ஸேபர் பறக்கும் திசைக்கு எதிர்த் திசையில் சென்று மறைந்தன. ஸேபர் விமானங்களை இயந்திரத் துப்பாக்கிகளால் துளைப்பது, தரையிலுள்ள விமான எதிர்ப்புப் பீரங்கிகளால் சுடுவது போன்ற முறைகளால் வங்க தேசத்தில் பாகிஸ்தான் விமானங்கள் நாசமாயின.

விமானங்களைப் பற்றிச் சொல்லும்போது ஸேபர்களை விட 'நாட்' விமானங்கள் உயர்ந்ததென்று தொனிக்கும் முறையில் சிலர் பேசுகிறார்கள். இது அபத்தம். அவை உண்மையில் நல்ல விமானங்கள் தான். ஆனால் அவைகளைப்



ஷஹீத் மினார் என்ற அழகிய நியாபகச் சின்னம் பாகிஸ்தானித் துருப்புக்களால் அழிக்கப்பட்டு இந்த அவல நிலையில் உள்ளது.

பாகிஸ்தானிகள் நன்றாகக் கையாளவில்லை. இந்திய விமானப் படையை விஸ்தரிப்பது அவசியம் என்பதுடன் 'மிராஜ்' போன்ற விமானங்களை வாங்குவது மிக அவசியம். இந்தியாவில் ''மிக்''

விமானங்கள் உற்பத்தியாகின்றன. உலக நாடுகளில் விமானங்களைத் தினம் தினம் மேம்படுத்துகின்றனர். மிக்-18 சீனவுக்குக் கொடுக்கப்பட்டது. நமக்குக் கிடைத்தது மிக்21. இவைகளையெல்லாம் மிஞ்சிவிட்டது ரஷ்யாவில் இன்று தயாராகும் ''மிக்'' விமானங்கள். நமக்கு ''மிக்-21'' செய்யும் முறை தெரிந்தால் போதும்.

இன்றைய உலகில் ராணுவத் தளவாடங்களை ரொக்கம் கொடுத்து வாங்குவது மிகவும் எளிது. காய்கறிகளுக்குக்கூடக் கட்டுப்பாடு ஏற்படலாம். ஆனல் விமானங்கள், அஸ்திரங்கள் முதலியவை உற்பத்தி செய்து குவிக்கப்பட்டு வருகின்றன. ஒரே ஒரு விஷயம், இவைகளைக் கிரயம் கொடுத்து வாங்க வேண்டும். வெங்காயத்தைக் கொண்டு மிராஜ் விமானம் வாங்க முடியாது. அந்நியச் செலாவணியைச் சுண்டி எறிந்தால் ஆகாய விமானங்கள் அன்றைய தினமே கிடைக்கும். ''ராணுவ உதவி'' என்று அமெரிக்கா பாகிஸ்தானுக்குக் கொடுத்தது வேறொரு ரகத்தைச் சேர்ந்தது. ராணுவ உடன்படிக்கை அவற்றிடையே உண்டு. 'ஸியாட்டோ' ஒப்பந்தம் உண்டு. அந்தப்படிக்கு பாகிஸ்தானுக்கு அமெரிக்க ராணுவ உதவி ஏராளமாகக் கிடைக்கிறது. கம்யூனிஸ விஸ்தரிப்பைத் தடுப்பது நோக்கம் என்று காரணம் கூறப்பட்டது. நடைமுறையில் இந்தியாவைத் தாக்கத்தான் பயன்படுகிறது. நமக்கு அம்மாதிரி உதவி தேவை இல்லே. பாகிஸ்தானின் நிலைமை எலிப்பொறியில் சிக்கிய எலி மாதிரி ஆனதற்கு இந்தியக் கடற்படையும் காரணம். நம்முடைய கடற்படை வெகு சிறியது. இவ்வளவு நீளம் இந்திய சமுத்திரத்தில் வியாபித்துள்ள உபகண்டத்துக்கு இன்று உள்ளதைப்போல் பத்து மடங்கு கடற்படை பலம் இருந்தால்கூடக் குறைவுதான். ஆனல் விமானம் தாங்கிக் கப்பல்கள் வாங்குவது என்றல் சாத்தியம் இல்லே. ''விக்ராந்த்'' பிரிட்டிஷ் கடற்படையிலிருந்து ஒய்வு பெற்றது. அதைச் செப்பனிட்டு ''ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணு'' என்பதுபோல் பத்திரமாகப் பாதுகாத்து வந்திருக்கிறோம்.

ஸ்ரீ நிரத் சௌத்ரி என்று கொனஷ்டையாக எழுதும் விமரிசகர் ஒருவர் உள்ளார். ''யுத்தம் நேர்ந்தால் முதல் பிரச்னே 'விக்ராந்'தை எங்கு ஒளித்து வைப்பது என்பது'' என்று அவர் எழுதினர். 'விக்ராந்த்' கப்பலே ஒளித்து வைக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லே. கிழக்குப் பகுதிக் கடற்படைக்கு அட்மிரல் கிருஷ்ணன் தலைமை ஏற்படுத்தப்பட்ட பிறகுதான் இந்தியா — பாகிஸ்தான் யுத்தம் மூண்டது. 'விக்ராந்த்' வழக்கமாக அரபிக் கடலில்தான் நடமாடும். அகஸ்மாத்தாகவோ முன்யோசனே காரணமாகவோ யுத்தம் மூண்ட சமயம் அது வங்காளக் குடா கடலுக்குச் சென்றது.

டாக்காவில் வங்கதேச அரசின் காரியாலயத்தில் ஒரு பகுதி.

விமானம் தாங்கிக் கப்பல் இருப்பதன் சௌகரியம் என்னவென்றல் எங்கு தாக்க வேண்டுமோ, அந்த இடத்துக்குச் சில மைல்களுக்குஅப்பால் சமுத்திரத்தில் விக்ராந்த்

தில்லி விமான நிலையத்தில் பங்களா தேஷ் தலைவர் ஷேக் முஜிபுர் ரஹ்மானுக்கு ராஷ்டிரபதியும் பிரதமர் இந்திராவும் அளித்த வரவேற்பின்போது.



கப்பல் இருந்தால் போதும். விமானந் தாங்கியின் தளத்திலிருந்து விமானங்களைக் கிளப்பி அனுப்புவதுவழக்கம்.

இங்கும் ஒரு குறைபாடு உள்ளது. 'விக்ராந்த்' பழைமையானது என்பதுடன் அதில் இயங்கும் ''அலிஜே'' விமானங்களும், ''ஸீ ஹாக்'' விமானங்களும் வெகு புராதனமானவை. பல வருடங்களுக்கு முன்பே இவைகளுக்குக் கண்காட்சிச் சாலேயில் இடம் கொடுத்திருக்க வேண்டும். இந்தக் கப்பலுக்கேற்ற புது விமானங்கள் இல்லாததற்கு நம்முடைய ஏழைமை ஒரு காரணம். இந்தக் கப்பலுக்கான விமான கோஷ்டியை அமெரிக்கா கொடுக்க மறுப்பது மற்ருெரு காரணம்.

''விமானம் பழைமையானது என்பதால் நம் காரியம் நின்றுவிடவில்லே. அதற்கு மாருக இவைதாம் வங்காளக் குடா கடலில் பாகிஸ்தான் கப்பல்களே நாசம் செய்தன. சிட்டகாங், காக்ஸஸ் பஜார் போன்ற துறைமுகங்களைத் தவிடுபொடி செய்தன'' என்ருர் அட்மிரல் நந்தா, இந்தியக் கப்பற்படையின் தளபதி.

அட்மிரல் நந்தா மிகவும் எளிமையானவர். பாதுகாப்புப் படையில் சிலர் தோற்றுவிக்கும் படாடோபமோ மிடுக்கோ இவரிடம் கிடையாது. ஆனல் கடற்படையின் முக்கிய அலுவல்கள், உலகில் உள்ள கப்பற் படைக

ளைப் பற்றிய விவரங்கள் ஆகியவை 'அத்துப்படி' இவருக்கு.

''அமெரிக்காவின் ஏழாவது கடற்படை வங்காள விரிகுடாவில் பிரவேசித்ததும் என்ன நினைத்தீர்கள்? அது பற்றிக் கவலை கொண்டீர்களா?''

''உரலுக்குள் தலையை விட்டால் உலக்கைக்குப் பயப்படலாமா? கடற்படை என்றால் கடற்படைதான். அமெரிக்கப் படை பெரிது, நவீனமானது, அவ்வளவுதானே?'' என்று பதிலுக்குக்கேட்டார் அட்மிரல் நந்தா.

''அமெரிக்கக் கடற்படை நெருங்கி வந்தால் என்ன செய்வதாக இருந்தீர்கள்?''

''அதைவிட அதன் நோக்கம் என்ன என்பது பற்றித் தெரிந்து கொள்வது முக்கியம் அல்லவா? இதுபற்றி நாங்கள் உயர் மட்டத்தில் சிந்தித்தோம். அமெரிக்கக் கடற்படையின் நோக்கம் ஒன்று, பாகிஸ்தான் ராணுவத் தலைவர்களை வங்க தேசத்திலிருந்து மேற்கே கொண்டு போவதாக இருந்திருக்கும் அல்லது நம்முடன் நேரடி மோதலாக இருக்கலாம். இரண்டாவது சாத்தியக்கூற்றை ஒதுக்கி வைத்தோம். முதல் சாத்தியக்கூறு சாத்தியமாகாமல் இருக்கத் துறைமுக வசதிகளைத் தவிடு பொடி செய்தோம். பிறகு விமானங்கள் இறங்கக்கூடிய விமானக்கூட வசதிகளையும் நாசம் செய்தோம். எங்கள் நோக்கம் நிறைவேறியது'' என்றார் அட்மிரல் நந்தா.

''இந்தியக் கப்பற் படையை விஸ்தரித்து நவீனப்படுத்துவது அவசியமல்லவா?''

''ஆம், அவசியம்தான். இதைச் செய்து கொண்டுதான் இருக்கிறது அரசு. சட்டியில் இருப்பதற்குத் தகுந்தாற்போல் பாதுகாப்புப் படைகளுக்கு நிதி ஒதுக்கப்படுகிறது. இனி கொஞ்சம் அதிகமாகவே ஒதுக்க வேண்டும் என்ற அபிப்பிராயம் மேலோங்கலாம்.''

''கடற்படையின் விஸ்தரிப்பில் எது முக்கிய அம்சம்?''

''எல்லாம் முக்கியம்தான். இந்தியா Frigate களை உற்பத்தி செய்யத் தொடங்கிவிட்டது. படிப்படியாக நாமும் சில மேம்பட்ட கப்பல்களைத் தயாரிக்கும் நிலை வந்து கொண்டிருக்கிறது. சில ''அயிட்டங்கள்'' மேலை நாடுகளிலிருந்து வரவழைக்க வேண்டும்'' என்றார் அட்மிரல் நந்தா. சற்றுப் பொறுத்துச் சொன்னார்: ''இந்தியா போன்ற நாடுகளுக்கு வர்த்தகம் வளர்ந்து கொண்டே வருகிறது. வர்த்தகக் கப்பல்கள் இந்திய சமுத்திரத்தில் தங்கு தடை இல்லாமல் போகும்படி பார்த்துக் கொள்வதும் நம் பொறுப்பல்லவா? அதற்குக் கடற்படையின் கவனம் தேவை.''

இந்தியா — பாகிஸ்தான் யுத்தம் முடிந்து இரண்டரை மாதங்களுக்கு மேலாகின்றன. இந்த யுத்தத்தில் பாதுகாப்புப் படைகள் நன்கு செயல்பட்டதைத் தவிர முப்படைகளிடையே காணப்பட்ட ஒத்துழைப்பு மிகவும் போற்றத் தக்கது. சாதாரணமாக எந்த யுத்தத்திலும் 'சகாமுசா' என்று அபிப்பிராய பேதங்கள் நிலவும். ராணுவத்தை விட ஆகாய விமானப் படை ஒசத்தியா அல்லது கடற்படை ஒசத்தியா என்பது இன்று நேற்றல்ல; பல ஆண்டுகளாக உள்ள சர்ச்சை. இரண்டாவது மகா யுத்தத்துக்குப் பிறகுதான் ஆகாய விமானப் படை யுத்தத்தில் இன்றியமையாத அம்சமாகி விட்டது.

இன்று நமக்குக் கிடைத்துள்ள மூன்று படைத் தலைவர்களும் மும்மணிகள். தளபதிகள் குழுவின் தலைவர் ஜெனரல் மானெக்ஷா டேராடுன் ராணுவக் கழகத்தில் பயின்றவர். அவர் சேனாதிபதியாகும்வரை பிரிட்டனில் உள்ள ஸாண்ட்ஹர்ஸ்ட்டில் பயிற்சி பெற்றவர்கள்தான் சேனாதிபதிகளாக இருந்திருக்கிறார்கள். அவருக்கு முந்தியவர் ஜெனரல் குமாரமங்கலம்.

சேனாதிபதி மானெக்ஷாவின் திறமை அவர் பல தலைமைகளில் உள்ள அதிகாரிகளுக்குக் கொடுக்கும் தன்னம்பிக்கையும் உற்சாகமுமே. எந்தச் சேவையிலும் சேனாதிபதி துப்பாக்கி பிடித்துச் சண்டை செய்வதில்லை. ராணுவ உச்ச மட்டத்திலிருந்து கொண்டு சாரதி லகான்களைப் பிடிப்பதுபோல் எங்கும் எல்லாம் கட்டுப்பாட்டில் இருக்கிறது என்ற உணர்ச்சியை ஜெனரல் மானெக்ஷா உண்டாக்கிக் கொண்டிருந்தார்.

கிழக்குப் பகுதியில் லெப்டினன்ட் ஜெனரல் அரோரா யுத்தத்தைத் திறம்பட நடத்தினார். ஜெனரல் மானெக்ஷா தாம் எப்பொழுது வாயைத் திறக்க வேண்டுமோ அப்பொழுது மட்டும் திறந்தார். உதாரணமாக இறுதிக் கட்டத்தில் அவர் பாகிஸ்தான் துருப்புக்களைச் சரணாகதி அடையும்படி அகில இந்திய ரேடியோ மூலம் தூண்டினாரே, அது மிகவும் மெச்சத்தக்கது.

யுத்தம் பற்றி ஜெனரல் மானெக்ஷாவைக் கேட்டபோது அவர் சொன்னார்: ''இந்திய அரசு வெகு தெளிவாக எங்களுக்கு உத்தரவுகளைக் கொடுத்தது. குறி எது என்பதும் சந்தேகமற விளக்கப்பட்டது. இதனால் எங்களுக்கு வேலை வெகு சுலபமாகிவிட்டது. இட்டப் பிரகாரம் நாங்கள் பணி செய்து முடித்தோம்.''

'மாமியார் மெச்சிய மருமகள் இல்லை' என்பார்கள். உண்மையானதோ அல்லது மானஸிகமானதோ மாமியாருக்குக் குறைகள் இருக்கலாம். அது போல வேறொரு நாட்டுக்குச் சென்று நல்ல பெயர் வாங்கிய ராணுவம் அபூர்வம். இந்த அம்சத்தில் இந்திய ராணுவத்துக்கு வங்க தேசம் முழுதிலும் நல்ல பெயர்.

டாக்காவில் உள்ள அக்ரம் பஜார் பகுதியில் நானும் என் பத்திரிகை சகாவான ஸ்ரீ சின்ஹா'.வும் இளநீர் குடிக்க நடைபாதையில் நின்று கொண்டிருந்தோம். இளநீர் உருவத்தில் பெரிதாக இல்லை. ''மூன்று கிளாஸ்களுக்குக் குறைவாகத் தண்ணீர் இருந்தால் காசு தேவையில்லை'' என்று கூவிக் கொண்டிருந்தார் அஜ்மல்கான். நான் வாங்கிய இளநீரில் நான்கு கிளாஸ்கள் இருந்தன. அப்பொழுது ஒரு ஜவான் வந்தார். ஓர் இளநீர் வெட்டிக் கொடுத்தார் அஜ்மல்கான். நாங்கள் அவருக்கும் சேர்த்துப் பணம் கொடுத்தபொழுது அஜ்மல்கான் ஆட்சேபித்தார். ''அவர் எங்களைக் காத்த புண்ணியவான். ஆகையால் இளநீருக்குக் காசு வாங்க மாட்டேன்'' என்றார். கொஞ்சம் பொறுத்துச் சொன்னார்: ''பாகிஸ்தானிலிருந்து வந்தனவே பிசாசுகள் அவை எல்லாம் இஷ்டமாகக் கேட்டதுமல்லாமல் எங்கள் பெண்மணிகளையும் கொடுமைப்படுத்தினவே''. அவர்

**பண்டைக்காலமாக பழனி சித்தர் வைத்தியசாலை உண்மையான முறையான நேர்மையான வைத்திய சேவை புரிகிறது!**

## வாலிப - வயோதிக - அன்பர்களே!

**பழனி சித்தர் மருந்துகளே பாரில் உயர்ந்தது என்பது உலகம் அறிந்த உண்மை!**

---

பிரபல பழனி

வைத்தியதிலகம் வைத்தியராஜ்



**Dr. S. காளிமுத்து**

**R.M.P. (IND) V.V.C. A.M.I.H.**

தங்களின் உடல் மிகவும் பலமில்லாமல் இளைத்து உடல் வலுவில்லாமல் குடும்ப வாழ்க்கையில் நிம்மதியில்லாமல் வயோதிகரைப்போல் களைப்பு மேலிட்டு வேலைகளைச் சரிவர செய்ய இயலாமை— இதனால் கஷ்டப்படுகிறீர்களா? வாலிப வயதில் தெரிந்தும், தெரியாமலும் செய்கிற தவறுதல்களே, இப்போது உடல் கெட்டு பலஹீன மடைந்து ரத்தக் குறைவு, சோர்வு, தலைவலி, உஷ்ணம், சோம்பல், கைகால் அசதி, பலஹீனம், உடல்வலி, களைப்பு, தூக்கக் குறைவு, ஆயாசம் பீதி, வெட்கம், பயம், வெறுப்பு உண்டாகி தாய் தந்தையரிடமும் மற்றவர்களிடமும் சொல்ல முடியாமல் மனவேதனையும் கஷ்டமும் அடைந்து, நிம்மதியில்லாமல் வாழ்கிறார்கள். மேற்படி காரணங்களால் உடல் நலம் பாதிக்கப்பட்டவர்களும், கவலைப்படவேண்டாம், இம்மாதிரியான வியாதியஸ்தர்கள் 74 வருட அனுபவம் பெற்ற நமது சாஸ்த்ரீய முறையான மிக உயர்தரம், உயர்தரம், முதல் தரம், இரண்டாந்தரம் எதுவாகிலும் சாப்பிட்டாலே எடை அதிகப்பட்டு, இரத்த விருத்தியுடன் உடல் பலமடைந்து புதிய சக்தி, புத்துணர்ச்சி பெற்று நிம்மதியான வாழ்க்கை வாழலாம். எவ்விதமான பத்தியமும் இல்லை, ஆர்டரில் தேவைப்பட்ட மருந்தின் விலைகளைக் குறிப்பிட்டு எழுதவும். வி.பி.பி. தபால் பார்சலில் பெற இன்றே எழுதுங்கள். சென்னையிலும், பழனியிலும், கேம்புகளிலும் நேரில் பெறலாம். மருந்தும் விருந்தும் மூன்று நாள் என்பது பழமொழி. மருந்து உபயோகிக்கும்பொழுதே பலனைக் காணலாம். வி. பி. பி. செலவு இலவசம். வெறும் கடிதம் கவனிக்க இயலாது. சித்த வைத்திய மருந்துகளும், பழனி மருந்துகளும் நல்ல பயன் தரும் என்பதை அறியவும்.

**ஒரு மாதம் சிகிச்சை மருந்துகள்: மிக உயர்தரம் ரூ 90**

**உயர்தரம்: ரூ. 42. முதல் தரம் ரூ. 33. இரண்டாநதரம்: ரூ. 24**

**எங்கள் மாபெரும் வெற்றிகரமான மாதாந்திர சுற்றுப்பயண தேதி விலாசங்கள் கவனிக்கவும்**

**கிளை: 41, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை - போன்: 21448**

சென்னைக் கிளை ஆபீஸில் 1ந் தேதி முதல் 7 வரை: மீண்டும் 15ந் தேதி முதல் 21 வரை நேரில் விஜயம்

GOVT REGD. T. M. No. 204341 — REGD. 15443

**வைத்திய திலகம் வைத்திய ராஜ் டாக்டர் S. காளிமுத்து**

## பழனி சித்தர் வைத்தியசாலை (K) பழனி S. I.

போன்: 316 (தியேட்டர் ஸ்ரீ ரங்கராஜா பக்கம்) தந்தி: சித்தர்




# தஞ்சாவூர் பர்மனேண்ட் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம் :
1087, மிஷன் தெரு, தஞ்சாவூர்

கோபுரங்களில் உயர்ந்தது **தஞ்சை பெரிய கோவில் கோபுரம்**
சேவையில் உயர்ந்தது **தஞ்சாவூர் பர்மனென்ட் பாங்க்**

உங்கள் சேமிப்பை எங்கள் பாங்கில் முதலீடு செய்து, உயர்ந்த வட்டியையும் பாதுகாப்பையும் அடையுங்கள்.

**சேவிங்ஸ் டிபாஸிட்டுக்கு வட்டி 4½% வரை**
(தினசரி நிலுவையின் பேரில்)

**பிக்ஸட் டிபாஸிட்டுகளுக்கு வட்டி 4¾% முதல் 7¾% வரை**
(வட்டி மாதா மாதம் பெறலாம்)

**ரெக்கரிங் டிபாஸிட்டுகளுக்கு வட்டி 7¾% வரை**

**மினி டிபாஸிட்டுகளுக்கு வட்டி 6% வரை**

தர்ம ஸ்தாபனங்கள், கல்வி மற்றும் அறநிலைய ஸ்தாபனங்களுக்கு
½% கூடுதல் வட்டி அளிக்கப்படும்

மற்ற விவரங்களுக்கு எங்கள் 68 கிளைகளில்
ஏதேனும் ஒன்றுடன் தொடர்பு கொள்ளவும்

D. லக்ஷ்மிநாராயண், சேர்மன் ☐ B. K. மாதவன், செக்ரட்டரி

SAKTHI-TPB 4



# வியக்கத்தக்க விதிமுறை அறுவை சிகிச்சை இன்றியே மூலத்தை சுருக்க உதவுகிறது

**நமைச்சலை நிறுத்துகிறது – நிமிடங்களில் வலியைப் போக்குகிறது**

நியூ யார்க் - இப்பொழுது விஞ்ஞானத் துறை, முற்றிவிட்ட மூலநோய் கண்டவர்களைத் தவிர மற்றவர்களின் மூலத்தை அறுவை சிகிச்சை இன்றியே சுருக்கும் ஓர் அற்புதமான மருந்தைக் கண்டுபிடித்துள்ளது. இம் மருந்தால், மூலநோய் கண்டிருந்த கணக்கற்றவர்களுக்கு 'கருத்தைக் கவரும் அபிவிருத்தி' ஏற்பட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. டாக்டர்களின் பரிசோதனைகளும் உறுதி கூறியுள்ளன. மூலநோயால் ஏற்படும் வலியும் நமைச்சலும் அதிவிரைவில் நீங்கி மூலம் சுருங்கி குணமளித்திருக்கிறது. இதன் விளைவுகள் வியக்கும்படி உள்ளன. இந்த நோயால் 10, 20 ஆண்டுகளாக அவதிப்பட்டு வருவோர்கூட "இப்போது மூலநோய் ஒரு பிரச்னையே இல்லை" என்று கூறுகிறார்கள். இந்த சிகிச்சை, மயக்க மருந்து, உணர்விழப்பு மருந்து, மற்றும் சுருங்கச் செய்யும் மருந்துகளைப் பயன்படுத்தாமலேயே வெற்றி தந்துள்ளது. மூலத்தைக் குணப்படுத்தும் இந்தப் புதிய மருந்தின் பெயர் பிரிபரேஷன் எச் ஆயின்ட்மெண்ட். மூலத்தை சுருக்குவதோடு, பிரிபரேஷன் எச் ஆயின்ட்மெண்ட் நமைச்சலை நீக்கி, வலி தணிந்து குடல் இயங்க உதவுகிறது.

உங்கள் மருந்து வியாபாரியை பிரிபரேஷன் எச் பற்றிக் கேளுங்கள். (மருந்திடும் குழாயுடன்) 30 கிராம் மற்றும் 50 கிராம் கொண்ட டியூபுகளில் கிடைக்கிறது.

* ரெஜிஸ்டர்டு ட்ரேட்மார்க்

ரெஜிஸ்டர்டு யூஸர்ஸ், ஜெப்ரி மேனர்ஸ் அண்டு கம்பெனி லிமிடெட், பம்பாய் -1.

74 PH 82 TAM

கண்களில் நீர் வழிந்தது. பின்னர் தெரிய வந்தது, அவர் கிராமத்தில் சில பாகிஸ்தான் துருப்புகள் அவருடைய மனைவியைத் தென்னை மரத்தில் ஏறிக் காய் பறித்துப் போடும்படி கட்டாயப்படுத்தினவாம். உயிருக்குப் பயந்து மரத்தில் ஏறியவளைக் கீழே இருந்து பார்த்து இளித்தனவாம் காக்கி உடைப் பாகிஸ்தான் படைகள். லுங்கி கட்டிய பெண்மணியை மரத்தில் ஏற்றி விட்டு உடை விலகியதைப் பார்த்து ஆனந்தப்பட்ட பிசாசுகள் அவள் உதிர்த்துப் போட்ட இளநீர்களைக் குடித்த 'பிறகு அவளைக் கற்பழித்தனவாம்.'

டாக்கா நகரத்தில் சர்வகலாசாலைப் பகுதி மிகவும் எழில் வாய்ந்தது. இந்தப் பகுதி பாகிஸ்தான் ராணுவத்தின் ஆக்கிரத்துக்கு ஆளாயிற்று என்றால் அதற்குக் காரணம் மாணவர்களே. வங்க தேசத்து மாணவர்களுக்கும் விடுதலை இயக்கத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. மொழிப்பிரச்னை தொடங்கியபொழுது மாணவர் என்ற ஹோதாவில் ஷேக் முஜீபுர் ரஹ்மான் உயர்த்திய கொடி, இன்றும் அவர் நிகழ்த்திய புரட்சி உலகுக்குத் தெளிவாகப் புரியும்படி பட்டொளி வீசிப் பறக்கிறது.

இக்பால் ஹால் என்பது மாணவர்களின் ஹாஸ்டல். (வங்க தேசத்தில் பாகிஸ்தானை ஞாபகப்படுத்தும் பெயர்களை மாற்றப் போகிறார்கள். இக்பால், ஜின்னா போன்ற பெயர்கள் எல்லாவற்றிலும் உள்ளன) வெளியே தாடியும் மீசையுமாகப் பலர் நின்றுகொண்டிருந்தனர். சிலர் ஆயுதங்களைக்கூட வைத்துக்கொண்டிருந்தனர். தயங்கிக் கொண்டே ''அப்துல் ராப்?'' என்றேன். சால்வை போர்த்திய தாடிக்காரர் ஒருவர் என்னை மாடிக்கு அழைத்துச் சென்றார். வராந்தாவில் மாணவர்கள் பலர் கும்பல் கும்பலாக நின்று கொண்டிருந்தனர்.

கதவுக்கருகில் உட்கார்ந்திருந்த மாணவர் மற்றவர்கள் உள்ளே போவதைக் கவனித்து அநுமதித்துக் கொண்டிருந்தார். ''பத்ரகார்' என்றதும் கதவைத் திறந்தார் அவர். அப்துல் ராப் மிகவும் கவர்ச்சிகரமான இளைஞர். ஜனாப் நூர் — ஏ — ஆலம் ஸித்திக்கி என்பவருடன் ஒரு தேசப் படத்தை வைத்துக் கொண்டு பேசிக் கொண்டிருந்தார். ''சில நிமிடங்கள் மன்னிக்கவும்'' என்றுபுன்சிரிப்புடன் கூறினார்.

சிறிது நேரம் கழித்து வங்க தேச மாணவர் குழுவின் தலைவரான ஜனாப் ஸித்திக்கி எழுந்து வந்து என் முன் உட்கார்ந்தார். ஜனாப் அப்துல் ராப்பை டாக்கா சர்வகலாசாலை மாணவர் சங்கத்தின் உபதலைவர் என்று அறிமுகப்படுத்தினார். நாங்கள் பேசத் தொடங்கியதும் சேர்ந்து கொண்ட இருவரும் மாணவர் தலைவர்கள்: ஜனாப் ஷாஜஹான் ஸிராஜ் மாணவர் சங்கத்தின் பொதுக் காரியதரிசி; ஜனாப் அப்துல் குதுஸ் வங்கதேச மாணவர் செயற்குழுவின் அங்கத்தினர்.

''நானோ மற்றவர்களோ சொல்வது வங்க தேச மாணவர்களின் கிளர்ச்சிக் கமிட்டியின் சார்பில் சொல்வது. தனிப்பட்ட முறையில் சொல்வதல்ல. இதைத் தெளிவாக எழுதிக் கொள்ளுங்கள்'' என்றார் ஜனாப் ஸித்திக்கி. சரி என்று தலையை ஆட்டினேன்.

நான் உள்ளே நுழைந்தபோது அவர்கள் விவாதித்துக் கொண்டிருந்தது ஆயுதங்களைப் பற்றி. வங்க தேசத்தில் மாணவர்கள் முஜீப் பாஹினி (முஜீப் ராணுவம்) என்ற பெயரில் பாகிஸ்தானிகளை எதிர்த்து வந்தார்கள். அவர்களிடம் கணிசமாக ஆயுதங்கள் இருந்தன. அவைகளைத் திருப்பிக் கொடுக்க வேண்டும் என்று உத்தரவு பிறந்தால் என்ன செய்வது என்பதை அவர்கள் வாதித்து வந்தனர்.

''மாணவர்கள் எண்ணிக்கை ஏழு லட்சம். நாங்கள் முஜீபின் சீடர்கள். முஜீப் பாஹினி என்பது தனிக் கிளை. நாங்கள் முஜீபின் சித்தாந்தத்தைப் பரப்புவதைக் கடமையாகக் கொண்டவர்கள்'' என்றார் ஜனாப் ஸித்திக்கி.

''முஜீபிஸம்'' என்றால் என்ன?

''முஜீப் தம் வாழ்நாள் எல்லாம் ஜனநாயகத்துக்காகவும் சோஷலிஸத்துக்காகவும் மதச்சார்பற்ற அரசுக்காகவும் பாடுபட்டவர். அவரால் சோஷலிஸம் இந்த நாட்டில் உதயமானது. மற்ற சித்தாந்தத்திலிருந்து எடுத்ததல்ல. இதை நாடெங்கும் பரப்புவதுடன் மற்ற நாடுகளிலும் இதுபற்றித் தெரியப்படுத்த விரும்புகிறோம்'' என்றார்.

''ஷேக் முஜீபுர் ரஹ்மானின் கொள்கைகள் மாறினால் என்ன செய்வீர்கள்?''

''இது ஐயப்பாட்டை அடிப்படையாகக் கொண்டது. எங்கள் சித்தாந்தம் மாறாது. பதவியில் உள்ளவர்கள் மனம் மாறினால் நாங்கள் அவர்களை எதிர்ப்போம்.''

இன்று வங்க தேசத்தில் முக்கிய பிரச்னை புனருத்தாரணம் என்று ஜனாப் ஸித்திக்கி ஒப்புக் கொண்டார். ''நாங்கள் கிராமங்களுக்குச் சென்று குடியிருப்புக்களைக் கட்டுவதிலும், பாழான ரோடுகளைச் செப்பனிடுவதிலும் உதவி புரியப் போகிறோம்'' என்றார்.

''சர்வகலாசாலை திறப்பது பற்றி என்ன சொல்கிறீர்கள்?''

''மிகவும் அவசியம். பாகிஸ்தான் பாவிகள் வேண்டுமென்றே பேராசிரியர்களையும் மேதைகளையும் எழுத்தாளர்களையும் கொன்று குவித்துள்ளார்கள். படித்தவர்கள் தானே தலைமை தாங்க முடியும்? நாளைக்கே சர்வகலாசாலை திறப்பதை நான் வரவேற்பேன்'' என்றார் ஜனாப் ஸித்திக்கி. ''ஆனால்...'' இது பெரிய 'ஆனால்' ஆகிவிட்டது. முதலில் மாணவர்களிடையே பீஹாரி முஸ்லிம்கள் இருக்கிறார்கள்; அவர்களுடைய போக்கைக் கவனிக்க வேண்டும்; அவர்களிடையே உள்ள ஆயுதங்களைப் பறிக்க வேண்டும் என்று எல்லாத் தலைவர்களும் ஒப்புக் கொண்டார்கள்.

வங்க தேசம் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த சமயம் அமெரிக்காவும் சீனாவும் அதற்கு எதிராகச் செயல்பட்டதை மாணவர் சமூகம் மறக்கவில்லை. இதனால் இந்நாடுகளுக்கு இந்தத் தேசத்தில் எவ்வித செல்வாக்கும் அடுத்து வரும் வருடங்களில் இருக்காது. இன்று அவர்களிடையே இந்தியாவுக்கு உள்ள செல்வாக்கைத் தொடர்ந்து நிலைநிறுத்த நம் நாட்டில் அவர்களுக்கு உயர் கல்விக்கு வாய்ப்புக் கொடுப்பது மிகவும் அவசியம். அவர்களும் வரவேற்பார்கள்.

நான் விடைபெற்றுக் கொண்டபொழுது அவர்கள் கண்கள் கலங்கின. ''எங்கள் நன்றியை உங்கள் மக்களுக்குத் தெரிவியுங்கள்'' என்றார் ஜனாப் ஸித்திக்கி. ''ஜெய் ஹிந்த்'' என்று பல மாணவர்கள் கூவினார்கள்.

(தொடரும்)

க்ரிஸ்டல் புன்னகையின்
இரகசியம் என்ன?

சொத்தையற்ற
பளிச்சிடும் பற்கள்...
துர்நாற்றமில்லாத
மூச்சுக்காற்று!

க்ரிஸ்டல்
டூத் பேஸ்ட்

ஹெக்ஸா க்ளோரோ:.பீன் • எஸ் எல் எஸ்
• டிஎிபி அடங்கியது.




கொழிக்கும் நுரைவளம், உன்னதமான நறுமணம்.
2 அளவுகளில் கிடைக்கிறது. அலெம்பிக்—ஹோம்ப்ரோ தயாரிப்பு.

everest/39 d/Acw Tam

# மாயூரத்தின் அதிர்ஷ்டம்!



**கல்வித்துறையின் நல்லதிர்ஷ்டம் மாயூரத்தின் பேரதிர்ஷ்டம் ஸ்ரீ ஸ்டாதம் வாயிலாகச் செயல் பட்டது. அது என்ன?**

குழந்தைகள் இரண்டு பேசிக் கொண்டிருந்தன. ஒரு சிறுமி சொன்னாள்: "டீச்சர் நம்மை ஏமாற்றுகிறாளடி! போன வருஷம் ஒன்றை இரண்டால் வகுத்தால் ½ என்று கற்றுக் கொண்டோமில்லையா? இப்போது ஒன்றை ½ஆல் பெருக்கினால் ½ என்கிறாளே, இந்தப் புது டீச்சர்?"

"ஆமாம், இந்த இரண்டில் எதை நம்புவது?" என்று பதிலுக்குக் கேட்டாள் அவள் தோழி.

இந்தச் சம்பாஷணையைத் தற்செயலாக அந்த ஆசிரியை ஒட்டுக் கேட்க நேர்ந்தது. அவள் உடனே அந்தக் குழந்தைகளைக் கூப்பிட்டுத் தன்னை ஏமாற்றுகிறவள் என்று வர்ணித்ததற்காகக் கோபித்துக் கொண்டுவிடவில்லை. மாறாகச் சிந்திக்க ஆரம்பித்தாள். இந்தக் குழந்தை அடுத்த பரீட்சையில் தோல்வியுற்றால் உண்மையில் ஃபெய்ல் ஆவது தான்தான் என்ற முடிவுக்கு வந்தாள். இதைத் தொடர்ந்து அந்த ஆசிரியை வகுப்பில் நல்ல தேர்வு எண்களைப் பெறாத பல குழந்தைகள் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வதை அவர்கள் அறியாதவாறே கவனித்து வந்தாள். நேரடியாக உரையாடியும் அவர்களின் பிரச்னைகளைப் புரிந்து கொண்டாள். இவற்றின் விளைவாக, "குழந்தைகள் ஏன் பரீட்சைகளில் தோல்வியடைகிறார்கள்?" என்ற தலைப்பில் ஒரு நூலே எழுதி விட்டாள்!

சென்னை அமெரிக்க நூல் நிலையத்தில் நடந்த ஒரு புத்தகக் கண்காட்சியில் மேற்படி புத்தகத்தைப் பார்த்து நான் பெருமூச்சுவிட்டேன். இந்த மாதிரியெல்லாம் அமெரிக்காவில்தான் நிகழ முடியும் என்று எண்ணினேன். அதே சமயம் கட்டாயக் கல்வி என்ற பெயரில் ஒரு வகுப்பில் ஐம்பது அறுபது குழந்தைகளைத் திணியத் திணிய அடைத்துக் 'கல்வி' போதிக்கும் நம்மூர்க் காட்சியும் மனத்திரையில் தோன்றியது. இயந்திரகதியில் உபாத்தியாயர்கள் பாடம் சொல்லிவிட்டு மணி அடித்ததும் கடமை தீர்ந்ததென்று துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு போகும் வேகத்தையும் எண்ணிப் பார்த்தேன். 'உபாத்தியாயர்களுக்குப் பிள்ளைகளிடம் அக்கறை இல்லை; பிள்ளைகளுக்கும் ஆசிரியரிடம் மதிப்பில்லை. இப்படியே போனால் நம் தேசத்தின் எதிர்காலம் என்ன ஆவது' என்று நினைத்து வருந்தினேன்.

அப்போது ஏற்பட்ட விசனம், சில தினங்களுக்குப் பிறகு மாயூரம் திரு கிருஷ்ணராவ் அவர்களைப் பற்றி நண்பர்கள் சிலர் கூறக் கேட்டபோது அடியோடு மறைந்துபோய்விட்டது. அப்புறம் அவரையே நேரில் சந்தித்துச் சற்று நேரம் அளவளாவவும் வாய்ப்பும் கிட்டியது.

மாயூரம் திரு கிருஷ்ணராவ் மாதிரி எல்லா உபாத்தியாயர்களும் இருந்துவிட முடியாது. என்றாலும் இந்தப் பாரத கண்டம் முழுவதும் தேடினால் அவரைப் போல் ஓராயிரம் பேராவது கட்டாயம் அகப்படுவார்கள். அப்படிப் பட்டவர்கள் இருக்கும்வரையில் நம் நாட்டின் எதிர்காலம் குறித்துக் கவலை இல்லை என்ற நம்பிக்கை ஏற்பட்டது.

மாயூரம் கொரநாடு முனிசிபல் பள்ளியில் கிருஷ்ணராவ் உபாத்தியாயராக இருந்த காலத்தில் பல வருஷங்கள் தொடர்ந்து எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைகளில் மாணவர்கள் நூற்றுக்கு நூறு சதம் தேறியிருக்கிறார்கள். இவர் அதே பள்ளியில் தலைமை ஆசிரியர் பொறுப்பேற்ற பிறகு அந்த அளவுக்கு மாணவர்களிடம் கவனம் செலுத்த முடியாமல் வேறு பல அலுவல்கள் வந்து சேர்ந்ததாலோ என்னவோ, இந்தச் சதவீதம் சற்றுக் குறைந்தது. ஆயின் 75 சதம் முதல் 77 சதம் வரை மாணவர்கள் பள்ளி இறுதிப் பரீட்சைகளில் தேறினார்கள்.

இந்தச் சதவீதங்களைக் கொண்டு மட்டும் ஓர் ஆசிரியரின் மதிப்பை எடை போட்டுவிட முடியாதுதான். இதைவிட முக்கியம் திரு கிருஷ்ணராவ் நல்ல மனிதர், உண்மையான நண்பர் என்ற முறையில் மாயூரம் சுற்று வட்டாரங்களிலெல்லாம் பிரசித்தி பெற்றிருப்பதுதான்.

கிருஷ்ணராவ் 1934ம் ஆண்டில் கும்பகோணம் கல்லூரியில் படித்து வந்த காலத்தில் அரசியலில் தீவிர ஆர்வம் காட்டினார். அப்போது அந்தக் கல்லூரியின் முதல்வராக இருந்து பின்னர் கல்வித்துறை டைரக்டராக உயர் பதவி ஏற்றார் ஸ்ரீ ஸ்டாதம். கல்வித்துறையின் நல்லதிர்ஷ்டம், மாயூரத்தின் பேரதிர்ஷ்டம் ஸ்ரீ ஸ்டாதம் வாயிலாகச் செயல்பட்டது! "அரசியலையே உத்தியோகமாகக் கொள்ளாதே, அது உனக்கும் நல்லதல்ல, அரசியலுக்கும் நல்லதல்ல" என்ற பொன்மொழியை ஸ்ரீ கிருஷ்ணராவிடம் அவர் உதிர்த்தார். இதன் விளைவு ஸ்டாதம் அவர்களின் உதவியுடனேயே சைதை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்தார் திரு கிருஷ்ணராவ். 1939ம் ஆண்டு முதல் மாயூரம் கொரநாடு முனிசிபல் பள்ளியில் உபாத்தியாயராகப் பணியாற்றி வந்துள்ளார். அத்தொழிலில்

மண்புழு
இம்மாத நாவல்
26.3.1972

இருந்தபடியே எம். ஏ. (பொருளாதாரம்) படித்துத் தேறினார்.

ஆங்கில இலக்கியத்தில் ஆழ்ந்த புலமை கொண்ட கிருஷ்ணராவுக்கு சமஸ்கிருதமொழியின் அவசியமும் பயனும் நன்கு தெரிந்திருந்தன. சம்ஸ்கிருதத்தில் பாண்டித்தியம் பெற்றவர்களைக் கௌரவிப்பதில் முன் நின்றார். பண்டிட் கிருஷ்ண சாஸ்திரிக்குத் திருவிடைமருதூரில் காஞ்சி ஆசாரியாளின் திருக்கரங்களால் ரூபாய் மூவாயிரம் பண முடிப்பு வழங்க ஏற்பாடு செய்தார். ஒய். மகாலிங்க சாஸ்திரிகளின் சஷ்டி அப்த பூர்த்தி விழாவை விமரிசையாக ஸர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் அவர்கள் தலைமையில் நடத்தினார். இவற்றுக்காகத் தாம் அதிகம் சிரமப்பட வேண்டியிருக்கவில்லையென்றும் நிதி திரட்டவும் விழாச் செலவுகளைச் சரிக்கட்டவும் ஒரு சில கடிதங்கள் மட்டுமே தாம் எழுத வேண்டியிருந்தது எனவும் அடக்கத்துடன் கூறுகிறார் ஸ்ரீ கிருஷ்ணராவ். ஆனால் ஒரு சில கடிதங்களின் மூலமே இவற்றைச் சாதிப்பது எப்பேர்ப்பட்ட அகடவிகட சாமர்த்தியம் என்பது நிதி வசூல் செய்து அனுபவப்பட்டவர்களுக்கு நன்கு தெரியும்.

கொரநாடு முனிசிபல் பள்ளியில் திறந்தவெளி அரங்கம் அமைக்கவும் அப்பள்ளியின் பொன்விழா கொண்டாடவும் திரு கிருஷ்ணராவ் முன் நின்றார். பழகுவதற்கு இனியவரான இவர் பலரது ஒத்துழைப்புடன் இக்காரியங்களை வெற்றிகரமாகச் செய்து முடித்தார்.

தமிழக அரசின் விருதைப் பெற்றுள்ள ஸ்ரீ கிருஷ்ணராவிடம், "மாணவர்கள் இந்தக் காலத்தில் உபாத்தியாயர்களை மதிப்பதே இல்லையே. இதற்கு என்ன செய்வது?" என்று கேட்டேன்.

அவர் சொன்னது கருத்துச் செறிவுமிக்கதாக இருந்தது. "உபாத்தியாயர்கள் முதலில் தங்கள் தொழிலை மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். கருத்தூன்றி அவர்கள் தங்கள் கடமையைச் செய்தால் மாணவர்களுக்கு இயல்பாகவே அவர்களிடம் மதிப்பு மிகும். மாறாக நாங்கள் கடமையாற்றுவதில் சற்று அலட்சியமாய் இருந்துவிட்டால்கூட மாணவர்கள் எங்களை விட்டெறிந்து பேசிவிடுவார்கள்!"

மாயூரம் கொரநாடு முனிசிபல் பள்ளியிலிருந்து எப்போது ஓய்வு பெறுவார் என்று காத்துக் கொண்டிருந்தாற்போல அவரைச் சமீபத்தில் சௌகத் இஸ்லாம் பள்ளி 'கொத்தி'க் கொண்டு போய் அங்கு தலைமை ஆசிரியராக்கிக் கொண்டது. "பள்ளியில் நல்லொழுக்கம் போதிக்கப்படுகிறது. (Moral Instruction) ஆனால் மத போதனை கிடையாது. இறை உணர்ச்சியை, கடவுளிடம் பயபக்தியை மாணவர்களிடம் வளர்க்கவேண்டியதும் அவசியம்தான். இப்போது நான் பணியாற்றும் பள்ளியில், பள்ளி நேரம் முடிந்த பிறகு இதைச் செய்கிறோம். சில முஸ்லிம் செல்வந்தர்கள் இதற்கென நிதி உதவி அளிக்கிறார்கள்" என்றார் ஸ்ரீ கிருஷ்ணராவ்.

இப்பள்ளியைச் சேர்ந்த எஸ். எஸ். எல். ஸி மாணவர்களில் வசதி உள்ளவர்கள் நீங்கலாக மற்றவர்கள், பரீட்சைக்குப் படிக்கவென்றே பள்ளி நேரத்துக்குப் பிற்பாடும் பள்ளிக்கே திரும்பி வருகிறார்கள்! அங்கு அவர்களுக்கு மின்விளக்கு வசதி, மேஜை, நாற்காலி முதலியன இருப்பதோடு பாடத்தில் சந்தேகம் ஏற்பட்டால் அதை நீக்க ஆசிரியர் ஒருவரும் சதா உடனிருக்கிறார்! இப்படி ஒரு புது முறையை இங்கு அமுல் படுத்தியிருக்கிறார் ஸ்ரீ கிருஷ்ணராவ்.

கதர்ப் பிரசாரம், ஹரிஜன முன்னேற்றம் ஆகியவற்றிலும் தீவிரப் பங்கு பற்றியுள்ள ஸ்ரீ கிருஷ்ணராவ் ஏ.வி.ஸி. தர்ம ஸ்தாபனத்தின் ஆதரவில் நடக்கும் சடையப்பா ஹாஸ்டலுக்குக் கௌரவ 'வார்ட'னாகவும் இருந்து வருகிறார். மாயூரம் கல்வி மாவட்ட தலைமை ஆசிரியர்கள் சங்கத்தின் தலைவராகவும் இருந்திருக்கிறார்.

இப்படிப் பல துறைகளில் சிறந்த பணியாற்றி வந்துள்ள திரு கிருஷ்ணராவை மாயூரம் நகர மக்கள் பாராட்டி விழா எடுக்க முனைந்திருப்பதில் வியப்பேதுமில்லையல்லவா? இம்மாதம் இருபத்தைந்தாம் தேதி உயர்நீதி மன்ற நீதிபதி கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்களும் தினமணி ஆசிரியர் திரு ஏ.என். சிவராமன் அவர்களும் பங்குபற்றி இவ்விழாவினைச் சிறப்பாக நடத்தித் தர இசைந்துள்ளார்கள்.

ஒரு முறை காஞ்சி காமகோடி பீடம் ஆசார்ய சுவாமிகள் சொன்னாராம், "கிருஷ்ணராவ் நமது திருப்பாவை, திருவெம்பாவை இயக்கத்துக்கு ஒரு கௌரவ பப்ளிக் ரிலேஷன்ஸ் ஆபீஸர்" என்று. நமக்கென்னவோ (ஆசார்யாள் மன்னிக்கவேணும்) இன்னும் ஒரு படி மேலேகூடப் போகலாம் என்று தோன்றுகிறது. 'கிருஷ்ணராவ் ஆசிரியர் சமூகத்துக்கே ஒரு கௌரவ பொது ஜனத் தொடர்பு அதிகாரிதான்' என்று கூறத் தோன்றுகிறது.

அவர் நற்பணிகள் மேலும் மேலும் சிறக்கட்டும்.

— குட்டிகிருஷ்ணன்

# டி ஐ ஐ ஸி

## தி தமிழ்நாடு இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பொரேஷன் லிமிடெட்

தி தமிழ்நாடு இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பொரேஷன், தமிழ்நாடு அரசால் துவக்கப்பட்டு, தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரியிலுள்ள எல்லாவகையான தொழில் திட்டங்களுக்கும் நிதியுதவி அளித்து வருகிறது. இந்த நிதியுதவி எல்லாத் தகுதிவாய்ந்த திட்டங்களுக்கும், பங்குதாரர்களுக்கும், கூட்டு - சேமிப்பு நிறுவனங்களுக்கும், வழங்கப்படுகிறது. தொழில் நுட்ப பயிற்சியாளர்கள், கிராமப்புற மருத்துவர்கள் மற்றும் மிருக வைத்திய பயிற்சியாளர்களுக்கு சிறப்புத் திட்டங்கள் மூலம் பிரத்தியேக நிதியுதவி அளிக்கப்படுகிறது. மேலும் போக்குவரத்து நிறுவனங்களுக்குத் தேவையான புதிய டிரக்குகள், லாரிகள், மற்றும் டாக்ஸிகள் வாங்க பிரத்தியேக தவணைகளில் திருப்பிச் செலுத்த, டி.ஐ.ஐ.ஸி. நிதியுதவி அளிக்கிறது. பின்தங்கிய மாவட்டங்களும், பிற்பட்ட பகுதிகளும் திருப்பிச் செலுத்தும் காலவரம்பில் தனிச் சலுகை அளிக்கப்படுகிறது.

**நிதியுதவி பெறுவதற்கான காலவரம்பும் நிபந்தனைகளும்:**

குறைந்த பட்சம் 1,00,000 (சிறு தொழில் நிறுவனங்களுக்கு) ரூ. 25,000

தொழில் நுட்ப பயிற்சியாளர்கள் மற்றும் கிராமப்புற மருத்துவ பயிற்சியாளர்கள். } ரூ. 10,000

அதிக பட்சம் ரூ. 25,00,000 (தொழில் நுட்ப பயிற்சியாளர்களுக்கும், கிராமப்புற மருத்துவ பயிற்சியாளர்களுக்கும் முறையே ரூ. 2 லட்சமும், 1 லட்சமும்.)

**வட்டி விகிதம்:**

9.75% விகிதம் முறையே பெரிய மற்றும் சிறு தொழில் நிறுவனங்களுக்கு.
7% விகிதம் பிற்பட்ட பகுதியிலுள்ள தொழில்நுட்ப பயிற்சியாளர்களுக்கும், கிராமப்புற மருத்துவர், மற்றும் மிருக வைத்திய பயிற்சியாளர்களுக்கும்.
8½% விகிதம் முறையே மற்ற சிறு தொழில் நிறுவனங்களுக்கு.

**முதல்கட்ட திருப்பிச் செலுத்தும் விடுமுறை:—**

சாதாரண சிறு தொழில் நிறுவனங்களுக்கு 2 வருடங்கள்.
பின் தங்கிய மாவட்ட திட்டங்களுக்கு 4 வருடங்கள்.

**நீண்டகால தவணை முறை:**

- 8 முதல் 10 வருடங்கள் வரை பிரத்தியேக சலுகை மூலம் திருப்பிச் செலுத்த சிறு தொழில் நிறுவனங்கள், தொழில் நுட்ப பயிற்சியாளர்கள் கிராமப்புற மருத்துவர் மற்றும் மிருக வைத்திய பயிற்சியாளர்களுக்கு வசதியளிக்கப் படுகிறது.

**டி ஐ ஐ ஸி**

இதயபூர்வமான நிதியுதவி



தேவையான விவரங்களுக்கு தொடர்பு கொள்க:

**தமிழ்நாடு இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பொரேஷன் லிமிடெட்**

எல். எல். ஏ. கட்டிடம், 150-A, மவுண்ட் ரோடு, சென்னை - 2

கிளைகள்: 1231, தெற்கு மெயின் தெரு, தஞ்சாவூர். 247, நாயக்கர் புதுத் தெரு, மதுரை. 6/37, ரேஸ் கோர்ஸ் ரோடு, கோயம்புத்தூர் -18

# அம்மா

## ரா. கணபதி

ராமகிருஷ்ணர் எத்தனையோ விஷயங்களில் சாரதையை யோசனை கேட்பார். இதனால் அவள் அகந்தை கொள்ளவில்லை. தன் 'அக'த்தை அகத்துக்காரரிடம் கரைத்து அவரது அபிப்பிராயத்தையே தனது கருத்தாகச் சொல்வாள். அவருக்கு ஏது பிரியமானது என்று உணர்ந்து அதையே தனக்குப் பிரியமாக்கிக் கொண்டவள்.

ஓர் உதாரணம்: கல்கத்தாவிலிருந்து சில மைல் தொலைவில் உள்ள பாணிஹாடி என்ற ஊரில் ஜேஷ்ட மாதத்தில் தண்ட மஹோத்ஸவம் என்ற பெரிய விழா நடக்கும். ஒரு முறை ராமகிருஷ்ணரும் அவரது அடியார் கூட்டமும் மூன்று படகுகள் அமர்த்திக் கொண்டு இந்த உத்ஸவத்துக்குப் புறப்பட்டனர். அவர்களிலே பல பெண்மணிகளும் இருந்தனர். தானும் உடன் வரலாமா என்று கணவரிடம் கேட்டு அனுப்பினாள் சாரதை.

''அவளுக்கு ஆசை இருந்தால் வரட்டுமே!'' என்று பதில் சொல்லியனுப்பினார் ராமகிருஷ்ணர். அந்தப் பதிலைக் கேட்டதும் ஒரு விநாடி யோசித்தாள் சாரதை. ''நான் வரவில்லை. ஏராளமான புருஷா கூட வரா. எனக்குச் சிரமமாயிருக்கும்'' என்று கூறி விட்டாள்.

மற்றவர்கள் அனைவரும் மகோத்ஸவம் பார்த்துவிட்டு இரவுதான் திரும்பினர். அன்று நடந்த விழாவின் வைபவத்தையும் ராமகிருஷ்ணர் அடைந்த திவ்விய போதை நிலையையும் அம்மாவுக்குத் தெரிவிப்பதற்காகப் பெண்கள் நஹவத்துக்குக் கிளம்பியபோது, அவர்களுக்குள் ஒரு தாபம் ஏற்பட்டது. 'ஆஹா, இத்தனை இன்பத்தையும் இழந்துவிட்டு அம்மா மட்டும் தனியாக நஹவத்தில் அடைபட்டுக் கிடந்தாளல்லவா?' என்றெண்ணி அப்பெண்கள் குறைப்பட்டுக் கொண்டனர். இதைப் புரிந்து கொண்ட ராமகிருஷ்ணர், ''அம்மா, எத்தனை புத்திசாலி பாருங்கள்! இன்னிக்குத் திருவிழாக் கூட்டத்திலே அத்தனை கண்ணும் என் மேலேயே இருந்ததாமே! அம்மா மட்டும் என் பக்கத்திலே இருந்திருந்தா சாதாரண ஜனங்களுக்கு எத்தனை கேலிக்கூத்தா இருந்திருக்கும்! 'பரமஹம்ஸர் பரமஹம்ஸர்னு சொல்றாங்களே! அந்த ஹம்ஸத்தோடே ஒரு ஹம்ஸியும் இருக்குதுடோய்'னு எகத்தாளம் பண்ணியிருப்பா. அம்மா வராதது எவ்வளவு நல்லதாப் போச்சு! ஆமாம், அவள் மகா புத்திசாலி'' என்றார்.

அறியா மக்கள், 'ஹம்ஸ — ஹம்ஸி' என்று நகைத்திருப்பார்கள். எல்லாம் அறிந்த ஆதிசங்கரரோ ஆதிதம்பதியை 'பஜே ஹம்ஸ த்வந்தம்' என்றே வணங்கினார்!

பெண் பக்தர்கள் நஹவத்துக்குச் சென்று எல்லா விஷயங்களையும் கூறிவிட்டு, ''நீங்கள் ஏனம்மா, வராமல் வைச்சுட்டேள்?'' என்று கேட்டனர்.

சாரதை புன்னகையுடன் மொழிவாள்: ''அவர் சொல்லியனுப்பிச்ச வாசகத்திலிருந்தே அவர் மனசு எனக்குப் புரிஞ்சுடுத்து. 'அம்மா வரட்டுமே'ன்னு அவர் தாமாக ஆசைப்பட்டுச் சொல்லலை. 'அவளுக்கு ஆசை இருந்தால் வரட்டுமே'ன்னார். அதனாலேதான் நான் வரவில்லை.''

பரஸ்பரம் எத்தனை மதிப்புத் தந்திருக்கிறார்கள்! எப்படி ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டும் இருக்கிறார்கள்! தாம் ஆசைப்படா விட்டாலும் அவளுக்கு ஒன்றில் ஆசையிருந்தால் அதை அவள் நிறைவேற்றிக் கொள்ள அவர் அனுமதிப்பார். ஆனால் அவர் ஆசைப்படாத ஒன்றை இவள் ஆசைப்பட மாட்டாள்!

கோஷா முறையையும் மதித்து, அதே சமயத்தில் அவளது ஆசைகள் சிலவற்றையும் மதித்தார் ராமகிருஷ்ணர். உதாரணமாக அவளுக்கு இசையில் உள்ள ஈடுபாட்டை அவர் அறிவார். ராமப் பிரசாத், கமலாகாந்தர் போன்றவர்களின் காளி கீதங்களைத் தாம் பாடும்போது சாரதை எப்படிச் சொக்கிப் போவாள் என்பதை அவர் அறிவார். அவர் தமது அறையில் கானம் செய்யத் தொடங்கும் பொழுதெல்லாம் அவருக்குக் காளியின் நினைவோடு, சாரதையின் நினைவும் சேர்ந்துவிடும். அவள்

இந்தப் பாட்டைக் கேட்க வேண்டாமோ என்று எண்ணுவார். ஆனால் ஆடவர் எதிரில் அவளை அழைத்து வைத்துக் கொள்ளவும் மாட்டார். ''அப்பா, ராமலால்! என்னுடைய திவ்விய போதத்தையும், கீதத்தையும் சித்தி அநுபவிக்காமல் இருக்கலாமா? கீர்த்தனத்தைக் கேட்டால் அவளும் தனக்குத் தானே பாடிண்டு அதிலே அழுந்திப் போவாளே! இந்த வடவண்டைக் கதவைத் திறந்து வை. நான் உரக்கப் பாடறேன். நஹவத்திலேயும் என் குரல் கேட்கும்'' என்பார்.

அப்படியே அவரது தேமதுரக் குரல் நஹவத்தில் கேட்டது! வடவண்டை வாசலால் வந்த ஒலியின் பரிமாணம் தேவிக்குப் போதவில்லை. தன் அறையில் இருந்த மூங்கில் தடுப்பிலும் சில குச்சிகளை அகற்றிவிட்டு அதில் காதைப் பொருத்திக் கொண்டு அவரது கானத்தில் பொதிந்தாள். பிற்பாடு ஒரு நாள் ராமகிருஷ்ணர், ''ராமூ! சித்தியோடே மூங்கில் தட்டி எலும்பை முறிச்சுண்டிருக்கு'' என்று ஹாஸ்யம் செய்தார். அவரது ஹாஸ்யம், அவளது பண்பு இரண்டும் புரியாத ராமலால், ''நீங்க கதவைத் திறந்து வைச்சதிலேதான் சித்திக்கு ஆசை வளர்ந்து, இப்படித் தட்டியைப் பிய்ச்சிருக்கா! இனிமேலே கதவைச் சாத்திண்டே பாடுங்கோ'' என்றான். ''ஒரு நாளும் அப்படிச் செய்யறதுக்கில்லை'' என்று முடிவாகக் கூறினார் ராமகிருஷ்ணர்.

ராமகிருஷ்ணரின் கானாமுதத்தில் கரைந்து போனவள் சாரதை. பற்பல ஆண்டுகளுக்குப் பின் ஒரு முறை அவள் வேறு யாரோ பாடும்போது அதைக் கேட்டுவிட்டு, ''டாகூரின் குரல் எப்பவும் என் காதிலே ரீங்காரம் செய்யறது. அந்தக் குரலோட நினைவிலே மற்ற எந்தக் குரலும் சப்புன்னுதான் இருக்கு. அடடா, அவரைப் போல் ஒரு பாடகர் உண்டா? பாடறச்சே அவர் பாட்டோடு அப்படியே ஒன்றிப் போயிடுவாரே! அவர் குரலை நினைச்சுட்டு இன்னொரு குரலைக் கேட்கவும் முடியலை.... ஒரளவுக்கு நரேனும், கிரீஷும் மாதுரியமாகப் பாடுவா'' என்றாள்.



(நரேன்தான் விவேகாநந்தர். கிரீஷ் என்பவர் பிரபல நாடகத் துறை நிபுணரான கிரீஷ் சந்திரகோஷ்.)

ஒரு நள்ளிரவில் சாரதையும் லக்ஷ்மியும் ஆழ்ந்த பொருள் கொண்ட ஒரு பாடலை அற்புதமாக மெல்ல இசைத்துக் கொண்டிருந்தனர். மாருதம் அந்த மாதுரியத்தை ஏந்திச் சென்று ராமகிருஷ்ணரின் செவியில் நிரப்பியது. சொக்கிப் போனார். மறு நாள் சாரதையிடம் வந்து ஏகப்பட்ட சபாஷ் போட்டார்! கோஷா நள்ளிரவில் பாடலாமா என்று சண்டை போடவில்லை.

கோஷா முறையில் நியாயமான விலக்குகளை அவர் அங்கீகரித்தார். ஒரு சமயம் அவர் பவதாரிணியின் மீதிருந்த அழகிய மலர் மாலையைக் கண்டு பேரானந்தம் கொண்டார். மல்லிகையையும், சிவப்பு ரங்க மலரையும் மாற்றி மாற்றித் தொடுத்திருந்த அந்த ஹாரத்தைக் கட்டியது சாரதை என்றறிந்து புளகித்தார். "அம்பாள் இதைப் போட்டுண்டிருக்கிற அழகை அவள் பார்க்க வேண்டாமோ? இப்பவே அவளை அழைச்சுண்டு வா" என்று ஒரு சிடரை அனுப்பினார். பிருந்தே என்கிற வேலைக்காரியின் 'துணை'யோடு அங்கு வந்தாள் சாரதை. அதேசமயம் பலராம் பாபு, சுரேந்திர பாபு முதலியோரும் ஆலயத்துக்கு வருவதைப் பார்த்து விட்டு, பிருந்தேயின் முன்றானையில் ஒளிந்து கொண்டாள் சாரதை. ஆலயத்தின் பின் வாசலுக்கு விரைந்தாள்.

ராமகிருஷ்ணர், "அம்மா! அந்தப் பக்கம் போகாதே. அங்கே முழங்கால் முறிச்சான் மாதிரி உயரமான படிகள் இருக்கு. முன்னே ஒரு தடவை ஒரு செம்படவப் பெண் அதிலேயிருந்து விழுந்து மாண்டு போச்சு. நீ வாசல் வழியாகவே வா" என்றார்.

விஷயத்தைப் புரிந்து கொண்ட பலராம் முதலியோர் விலகிப் போயினர். அதன் பின் சாரதாமணி பவதாரிணியின் சந்நிதிக்கு வந்து தரிசித்துப் பூரித்தாள். அந்தக் காட்சியைப் பார்த்துப் பூரித்தார் ராமகிருஷ்ணர்.

உலக நடப்புக்களில் மட்டுமின்றி ஆத்மிக அநுபவங்களிலும்கூட அவள் 'கோஷா'வாக இருப்பதையே ராமகிருஷ்ணர் விரும்பினார். 'ஆத்மிகத்தில் கோஷா' என்றால் என்னவென்று வியப்பாக இருக்கிறதா? ஆத்ம சாதனையில் பரவச பாவங்கள் ஏற்படுவது உண்டு அல்லவா? சாரதைக்கு இதிலும் ஆர்ப்பாட்ட பரவசம் ஏற்படாமல் உள்ளடங்கிய உன்னதங்களே சித்திக்க வேண்டும் என்று ராமகிருஷ்ணர் விரும்பினார். அவர் அவளுக்கு அளித்த ஆன்மிகப் பயிற்சிகள் பலப்பல. ஆனால் இவற்றை அவ்விருவரும் வெளி உலகுக்கு அதிகம் தெரிவிக்காமல் முக்காட்டுக்குள்ளே கோஷாவாகவே வைத்திருந்தனர். உதாரணமாக 1883ம் ஆண்டு சாங்கோபாங்கமாக ஸாவித்திரி விரதம் என்ற ஒன்றை தேவி சாரதை அநுஷ்டித்தாள். ஆனால் இதன் விவரங்கள் தெரியவேயில்லை.

சாரதை வேலையில் ஈடுபட்டிருக்கும் போதும் அவளது உள் மனம் சக்தி மந்திரத்தை ஜபித்தபடி இருக்கும். இதனால்தான் அவள் தினமும் லக்ஷம் ஆவிருத்தி ஜபம் செய்ய முடிந்தது. வேலையே இல்லாமல் ஜபம் என்று அவள் அமரும்போது அவளது மனம் பரிபூரணமாக மந்திரத்திலேயே கரைந்து விடும். உலகப் பிரக்ஞையோடு அவளே அறியாத முறையில் மனத்தின் ஒரு மெல்லிய இழைதான் ஒட்டிக் கொண்டிருக்கும். இச்சமயங்களில் வெளி உலகில் ஏதேனும் அரவம் ஏற்பட்டு விட்டால் அந்த மெல்லிய இழை துடிதுடித்துப் போய் விடும். "ஒரு நாள் நான் ஜபம் பண்ணும்போது பிருந்தே ஒரு வெங்கலத் தட்டைக் கீழே போட்டுட்டா. அந்தச் சத்தம் என் இதயத்தையே கிழிச்சுடற மாதிரி இருந்தது" என்று அம்மா சொல்லியிருக்கிறாள். இத்தனை ஜாக்கிரதையுடன் ஜபம் புரிந்த போதிலும் பரவசக் கூத்தாடவில்லை! ஒரு முறை சாரதைக்கே குறை உண்டாயிற்று. குறிப்பாகக் கௌரியம்மைக்கு ஏற்படும் தெய்விகமான உணர்ச்சி எழுச்சிகளைக் கண்டபோது அவளுக்குத் தன்னைப் பற்றியே சிறுமை எண்ணம்கூட உண்டாகி விட்டது. கணவரிடம் நேரில்பேச நாணி, லக்ஷ்மியைத் தூது அனுப்பினாள்.

லக்ஷ்மி ராமகிருஷ்ணரிடம் சென்று, "சித்தப்பா! சித்திக்கும் கொஞ்சமாவது பரவசக் கிளர்ச்சி உண்டாக அநுக்கிரகம் பண்ணுங்கோ" என்றாள்.

"ஊஹூம். முடியவே முடியாது. பெண்டுகள் எல்லாத்திலேயும் அடங்கித்தான் இருக்கணும். ஆட்டமில்லாமல் அழுத்தமா இருக்கணும். பெண்களுடைய பலமே விநயம்தான். இல்லாட்டா ஊர் சிரிக்கப் போயிடும். கௌரியைப் பற்றி நமக்கென்ன வந்தது? அவ காளிகாட்டைச் சேர்ந்தவள். காளிசாட்டிலே சாக்தான் ஏராளமாக வந்து கன்னிகைகளுக்குக் காளி பூஜை பரவசமாகப் பண்ணுவா. அதையே பார்த்துண்டிருக்கிற ஸ்திரீகளுக்கும் பரவசக் கூத்து தன்னாலே வந்துடறது. பொதுவிலே பெண்களுடைய ஸ்வபாவமே நளினமானது' அவா

## மங்கிய முகத்தில் மகிழ்ச்சி பொங்கிட பாரி மிட்டாய்கள்

எத்தகைய மன நிலையையும் மாற்றிட வல்லது பாரி மிட்டாய். புதிய, முழுமையான, சுவை மிகுந்தவை பாரி மிட்டாய்கள். அதன் முதல் சுவையே தனி இன்பம்.




பாரிஸ்
கன்பெக்ஷனரி
லிமிடெட்,
சென்னை

PRS/6544

## உழைப்பின் இன்பம்

ஓயாத உழைப்பினிடையே பூரண ஆனந்தம் காணும் வாழ்க்கை என்னுடையது. நாளைக்கு என்ன நடக்கும் என்பதைப் பற்றி நினைக்கவே நான் விரும்புவதில்லை. இதனால் சுதந்திரமாக வானில் பறக்கும் பட்சி போல் இருக்கிறேன். சரீரத்தின் நவைகளுக்கு எதிராக இடைவிடாமல் நேர்மையுடன் போரிட்டு வருகிறேன் என்கிற எண்ணமே எனக்கு உயிரூட்டம் அளிக்கிறது.

-மகாத்மா காந்தி

அபலைகள். அந்த நளினத்தையும், அபலைத் தன்மையையும் காப்பாத்திண்டு மிருதுவாவே இருக்கறதுதான் அவாளுக்கு சுபிட்சம்; அதுதான் அவாளுக்கு வெற்றியும்கூட'' என்றார்.

பிறகு சாரதையிடம் வந்து அவர் சொன்னார்: ''நீ தூது அனுப்பின லக்ஷ்மிக்கும் புருஷ குணம் எத்தனையோ இருக்கு. அவ யாத்ரா (சமய நாடகம்) நடிகர்கள் மாதிரி அப்படி அப்படியே வசனங்களைப் பேசியும், பாட்டுப் பாடியும் காட்டறு. துருதுருப்பும் பரபரப்பும் அவகிட்டே அதிகம். உனக்கு இதெல்லாம் உதவாது. பெண்களுக்கு அடக்கம்தான் பூஷணம்.''

இன்னொரு நாள் யோகின்மா ராமகிருஷ்ணரிடம் சொன்னாள்: ''சாரதாம்மாவின் மகிமை மற்றவாளுக்குத் தெரியாமலே இருக்கு. அம்மாவுக்கும் உலகம் கொண்டாடற மாதிரி பாவ சமாதி, தெய்விக பரவசம் இதெல்லாம் வரும்படியாக நீங்கதான் கிருபை செய்யணும்!''

ராமகிருஷ்ணர் கட்டிலில் கட்டை போல உட்கார்ந்திருந்தார்.

ஏனோ அவரைப் பார்க்கவே அச்சமாயிருந்தது யோகினம்மைக்கு. தவறுகப் பேசி விட்டோமோ என்ற கலக்கத்துடன் அவரை நமஸ்கரித்துவிட்டு நஹபத்துக்கு விரைந்தாள்.

நஹபத்திலே கதவு அரை குறையாகத் திறந்திருந்தது. உள்ளே பூஜையில் அமர்ந்திருந்தாள் சாரதை.

யோகின் கதவிடுக்கு வழியாகப் பார்த்தாள். என்ன ஆச்சரியம்! சாரதா தேவி கலகலவென்று நகைத்துக்கொண்டிருக்கிறாள். பாவ சமாதியில் ராமகிருஷ்ணர் நகைப்பாரே அதே நகைப்பு!

இதோ கலகல நகை மாறுகிறது. பலபலவெனக் கண்ணீர் கொட்டுகிறது, சாரதையின் கண்களிலிருந்து! விம்மி விம்மி அழுகிறாள். ராமகிருஷ்ணர் பாவ நிலையில் விம்முவாரே அதே விம்மல்.

சாரதை மாறி மாறிச் சிரித்தாள், அழுதாள். சிரித்துக் கொண்டே அழுதாள். அழுதுகொண்டே சிரித்தாள்.

பிறகு அந்த பாவங்கள் அனைத்தும் மறைந்தன. அடித்த சிலையாகத் தன்னில் தானே ஊன்றி, சமாதியில் ஆழ்ந்து விட்டாள் தேவி.

யோகினுக்கு இனம் தெரியா அச்சம் உண்டாயிற்று. ஓசைப் படாமல் கதவைச் சாத்திவிட்டு அகன்றாள்.

சிறிது போதுக்குப் பின் அவள் திரும்பியபோது தேவி சமாதி நிலை கலைந்து பூஜை முடித்து, சாந்தமாக அமர்ந்திருந்தாள். ''டாகூர் கிட்டே போயிட்டு வரேளா?'' என்று யோகினம்மையை அர்த்த புஷ்டியுடன் வினவினாள்.

யோகின்—மா பொய்க் கோபத்துடன் சிணுங்கினாள். ''உங்களுக்குப் பரவச அநுபவங்களே வரதில்லேன்னு சொல்லுவேளே, அதை நம்பிண்டு பைத்தியக்காரியாட்டமா டாகூர்கிட்டே போய்ச் சிபாரிசு பண்ணினேன்'' என்று அவள் தொடங்கியபோதே சாரதை சிரித்து மழுப்பிவிட்டு வேறு ஏதோ விஷயத்துக்குத் தாவிவிட்டாள்.

எதிலுமே அடங்கி வாழ வந்த அவதாரம் இது! சிற்சில சமயங்களில் அவளையும் மீறி, பரவச நிலை எய்தி விடுவாள் — பாத்திரத்தின் மேல் மூடியையும் தள்ளிக் கொண்டு பால் பொங்குவது போல்!

யோகினம்மை சாரதையுடன் ஓரிரவு நஹபத்தில் சயனித்திருந்தாள். யாரோ எங்கோ குழலூதினார்கள். நள்ளிரவில் அந்த இன்னொலி தெய்விகமாகப் பரவியது. படுத்திருந்த சாரதை எழுந்திருந்து அமர்ந்தாள். அமாநுஷ்யமாகச் சிரிக்கலானாள். யோகினும் எழுந்திருந்து மூலையில் போய்ப் பெட்டிப் பாம்பாகச் சுருட்டிக் கொண்டாள். இல்லற வாழ்வில் இருந்த தனது அண்மையும் அப்போது அம்மாவின் பரிசுத்தத்துக்கு ஹிம்சையாக இருக்கும் என்று அவளுக்குத் தெரிந்ததாம்!

சாரதைக்கு பாகவதம், ராமாயணம், தேவி மாகாத்மியம் முதலிய கதைகளையும் அழகுபடப் போதிப்பார் ராமகிருஷ்ணர். பாகவதம் சொல்லி வரும்போது ராமகிருஷ்ணர் லக்ஷ்மியிடம், ''மாடுகள் உண்டபின் அசை போடுவது போல், பகலில் நான் சொல்கிற கதைகளை நீயும் சித்தியும் ராத்திரியிலே மறுபடியும் நினைப்பூட்டிண்டு பேசிக்கணும். அப்போதான் அது எப்பவும் மனசை விட்டு விலகாமல் நிற்கும்'' என்றார். சித்தியும் மகளும் அவ்விதமே செய்து வந்தனர்.

மூலாதாரத்திலிருந்து சகஸ்ராரம் வரையில் உள்ள சக்கரங்களை ராமகிருஷ்ணர் தம் கைப்பட ஒரு காகிதத்தில் வரைந்து சாரதையிடம் கொடுத்திருந்ததாகத் தெரிகிறது. இதிலிருந்து அவர் யோக சாஸ்திரத்திலும் அவளுக்குப் பயிற்சி அளித்தார் என்று புலனாகிறது.

வெளி மனிதர்கள் அவளைச் சாமானிய ஸ்திரீயாக எண்ணிய காலத்திலும் அவளது திவ்யானுபவங்களை அவர் அறிந்திருந்தார். ராமகிருஷ்ணரின் பக்தர்கள்கூட 'டாகூருக்குப் புத்திக் கலக்கம்தானோ?' என்று கலங்கிய சமயங்களிலும் — ஏன், அவரே தம்மைப் பற்றி இவ்விதம் சம்சயித்த சமயங்களிலும் — சாரதைக்கு அவரது உத்தமமான புனித அநுபவம் புரியத்தான் செய்தது. ஒரு நாள் அவர், ''பீடா சுருட்டி வெச்சுட்டு, என் படுக்கையை நன்னாத் தட்டிப் போட்டுட்டு, இந்த அறையையும் மெழுகிச் சுத்தப்படுத்தி வை. நான் காளியை நமஸ்காரம் பண்ணிட்டு வரேன்'' என்று சொல்லி, பவதாரிணி சந்நிதிக்குச் சென்றார். அம்மா அந்தக் காரியங்களைச் செவ்வனே செய்து முடிக்கிற சமயத்தில் ராமகிருஷ்ணர் திரும்பினார். அவர் நடை தடுமாறியது. கண்கள் சிவந்திருந்தன. எதையோ குழறியது அவரது திருவாய். அவர் வழக்கமில்லாத வழக்கமாக அம்மாவை இழுத்து நிறுத்தினார். அவருக்கே தம் நிலை புரியவில்லை. ''அம்மா! நான் ஏன் இப்படியெல்லாம் பண்ணறேன்? குடிச்சுத் தொலைச்சுட்டேனா?'' என்றார்.

சிவந்த கண்கள், உடம்பிலே ஆட்டம், உளறுகிற உதடுகள் — இத்தியாதி லட்சணத்தோடு அவரே 'குடித்தா விட்டேன்?' என்று கேட்டபோது எந்தப் பெண்ணுக்கும் ஐயம் உண்டாகும்!

ஆனால் அவரால் பலவந்தமாக இழுத்து நிறுத்தப் பட்டிருந்ததால் தள்ளாடிக் கொண்டிருந்த தேவியோ மனத்தில் சிறிதும் தள்ளாட்டமில்லாமல், தெளிந்து சொன்னாள்: ''என்னன்னு இப்படிக் கேக்கறேள்! நீங்களாவது குடிக்கிறதாவது?''

கணவருக்கு உரிய உன்னத ஹாஸ்ய உணர்வைத் தானும்பெற்றுத் தொடர்ந்தாள்: ''இல்லை; குடிச்சுத்தான் இருக்கேள். காளியம்மாவோட பிரேமை அமிருதத்தை நன்னாக் குடிச்சுட்டு வந்திருக்கேள்.''

ராமகிருஷ்ணருக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. ''ஆகா, எத்தனை சரியாச் சொல்லிட்டே!'' என்று பாராட்டினார்.

சாரதா தேவியின் அன்றாட நடப்புக்களைப் பார்த்து வரும்போது அவள் அவருக்கு அமுதம் படைப்பதாகச் சொல்லிவிட்டு, வேறேதேதோ அமுத சம்பவங்களுக்குப் பாய்ந்து விட்டோம். பரவாயில்லை, தேவி அவருடன் ஏகாந்தமாக இருந்ததே இந்தப் போஜன வேளையில்தான். அதை இத்தனை நீளம் நீட்டி அந்தத் திவ்விய தம்பதியை இத்துணைக் காலம் தனியாக விட்டதும், அம்மாவின் ஆசியையே நமக்கு வாங்கித் தரும்!

## வையத்தை இயக்கும் வைதிகம்

உலகில் உள்ள மற்ற தேசங்கள் எதிலும் வைதிக ஆசாரம் இல்லாதபோது நமக்கு மட்டும் இது எதற்கு என்று கேட்கிற பாரதீயர் (இந்தியர்)களும் இருக்கிறார்கள். ஒரு ரயில் இருக்கிறது. அதில் பல பெட்டிகள் இருக்கின்றன. ஆனால் ஒரே ஒரு டிரைவர்தான் இருக்கிறார். அவர் அந்தப் பெட்டிகள் எதிலும் இருப்பதில்லை. என்ஜினில் இருக்கிறார். அவர் என்ஜினை ஓட்டினாலே அத்தனை பெட்டிகளும் அந்த வழியில் ஓடுகின்றன. உலகம் என்ற ரயிலில் ஏனைய சகல நாடுகளும் பெட்டிகள்; பாரதமே என்ஜின். அந்த என்ஜினை நல்ல வழியில் ஓட்டுவது வைதிக தர்மம் என்ற சாரதியே யாகும். நம் ஒரு நாட்டில் வைதிக தர்மம் கடைப்பிடிக்கப்பட்டாலே போதும்; உலகமனைத்தும் நல்ல மார்க்கத்தில் செல்லும். மற்றப் பெட்டிகளில் டிரைவர் இல்லாததால் என்ஜினிலும் டிரைவர் வேண்டாம் என்பது போலாகும், நாமும் மற்ற நாடுகளைப் பார்த்து வேத தர்மத்தைக் கைவிடுவது.

— ஸ்ரீ ஸத்ய ஸாயி பாபா

* * *

**ரா**மகிருஷ்ணர் பகலுணவு உண்டு முடிக்கும்போது சுமார் பதினொரு மணியாகிவிடும். காலை மூன்று மணிக்கு விழித்து எத்தனையோ காரியம் செய்த சாரதையின் திருஉதரத்தில் இதுவரை தின்பண்டமோ, பானமோ எதுவுமே இறங்கியதில்லை. அந்தக் காலத்தில் காப்பி, டீ உண்டா, ரொட்டி, பிஸ்கத்து உண்டா? பதி உண்டவுடன், அவர் மிகுதி வைத்துள்ள உச்சிஷ்டத்தில் சிறிதளவை அவசரமாக உண்டு, ஒரு குவளை நீர் பருகுவாள் தேவி. பிறகு தன் இருக்கைக்குத் திரும்பி, வெற்றிலைச் சுருள் மடிப்பாள். இந்த வேலையை முடித்துச் சிறிது நேரம் மிக மெல்லிய குரலில் கானம் செய்வாள். ஆலையில் ஒரு மணிக்குச் சங்கு ஊதும்போது உணவு உட்கொள்வாள். அதன் பின் சிறிது நேரம் 'கட்டை'யைக் கீழே போடுவாள். ஜன நடமாட்டமில்லாதபொழுது தேவி நஹபத்திலிருந்து வெளி வந்து, படியிலே அமர்ந்து, தனது அடர்ந்த நீண்ட கேசத்தை வெய்யிலில் உலர்த்திக் கொள்வாள். அதிகாலையில் நீராடிவிட்டு இது

காறும் ஒரு சும்மாடு கூந்தலை ஈரத்துடன் சுமந்து கொண்டிருப்பது எத்தனை சிரமம் என்பதைப் பெண்களே அறிவர். பிறகு விளக்குத் திரிகள் திரிப்பது போன்ற சின்னச் சின்னக் காரியங்களைச் செய்வாள். மாலை ஸ்நானத்துக்கு, கூப்பிடு தூரத்திலே உள்ள கங்கைக்குச் செல்ல மாட்டாள். ஜனசஞ்சாரம் இருக்குமே! நஹபத்திலே ஒரு மூலையிலே எப்படியோ குளித்து விட்டு, உடைகளையும் தோய்த்துக் கொள்வாள். பிறகு நஹபத்தில் வைத்திருந்த தெய்வத் திருவுருவங்களின் முன் விளக்கேற்றி வைத்துத் தூபம் காட்டுவாள். புனித சந்தியா காலத்தில் சிறிது தியானம் செய்வாள். அடுத்து பக்தருக்காகவும் பதிதேவருக்காகவும் உணவு தயாரிக்கும் வேலை தொடங்கி விடும். மாலையில் கல்கத்தாவிலிருந்து டாகூரைக் காண வந்த பலர் வெகு நேரம் தங்கிவிடுவர். அதன்பின் அவர்கள் வீடு போய்ச் சேரமுடிந்த நேரமாகிவிடும் அல்லவா? எனவே காளி கோயில் பிரசாதம் அனைவருக்கும் போதாது என்பதால் அவர்களுக்காகவும் பலவித உணவு வகைகளைச் சமைப்பாள் அம்மா. பெண் மணிகள் இரவிலே திரும்புவது சிரமம் அல்லவா? அவர்கள் தக்ஷிணேசுவரத்திலேயே படுப்பார்கள். சின்னஞ் சிறிய நஹபத்தில் என்ன மந்திரமோ செய்து அத்தனைபேருக்கும் சயனம் தயாரித்து விடுவாள் அம்மா. அவர்கள் ராமகிருஷ்ணருடன் இரவு பத்து மணிவரை உரையாடிவிட்டு நஹபத்துக்குத் திரும்புவார்கள். இவளோ உணவு பரிமாறும் வேளை தவிர மற்றப் பொழுதுகளில் அவரது தரிசனமே பெறுமல், ஆனல் அதற்காகவும் வருந்தாமல், அந்தப் பெண்களுக்கு உணவு செய்தும், படுக்கை விரித்தும் பணி செய்வாள். பதினொரு மணிக்குப் பிறகு தானும் ஏதோ உண்டு விட்டு, ஒத்தாள் ஒன்றின்மீது முரட்டுப் பாயை விரித்துக் கொண்டு அப்படியே படுத்து உறங்கி விடுவாள்.

அவள் அடங்கித்தான் இருக்க வேண்டும் என்று ராமகிருஷ்ணர் விரும்பியது போலவே, அவள் இவ்விதம் உழைத்துக்கொண்டே யிருப்பதையும் அவர் மனமார வரவேற்றார். ''எல்லோரும் உழைக்கணும். அதுவும் பெண்டுகள் சோம்பி உட்கார்ந்திருக்கவே கூடாது. வேலை யில்லாமல் உட்கார்ந்திருப்பதால் வீணுன எண்ணங்கள்தான் உண்டாகும். ஏன், கெட்ட சிந்தனைகள்கூட வரும்'' என்பார். வீணுன எண்ணமோ கெட்ட எண்ணமோ எழவே முடியாத தேவி சாரதை மற்றவர்களுக்கு உதாரணமாக உழைத்துக் காட்டினுள்.

அவள் சிறிது நேரம் வேலை இல்லாமலிருந்தாலும் அவர் மெனக்கெட்டு நஹபத்துக்கு வந்து ஏதாவது ஒரு வேலையைக் கொடுத்து விட்டுப் போவார். பிற்காலத்தில் அம்மா நினைவுகூர்ந்து சொல்வாள்: ''ஒரு நாள் அவர் ஏகப்பட்ட சணல்கண்டைக் கொண்டு வந்தார். 'இந்தச் சணலையெல்லாம் நன்னு முறுக்கி, என் அறையில் நாலு அஞ்சு உறி பண்ணித் தொங்கவிடு. காளி கோயில்லேயிருந்தும், பக்தாள் கிட்டேயிருந்தும் வருகிற பட்சணம் பழ வகைகளை உறியிலே வச்சிருந்தா பசங்கள் வரச்சே கொடுப்பேன்'' என்றார். (பிற்காலத்தில் ராமகிருஷ்ணரின் பெயரில் எழுந்த உலக ஸ்தாபனத்தின் ஆதார ஸ்தம்பங்களாக நின்ற மகா புருஷர்கள் இந்தப் 'பசங்கள்' தான்) அவர் சொன்னபடியே பண்ணினேன். கூளம் கூளமா சணல் பாக்கி யிருந்தது. அதையெல்லாம் ஒரு பைக்குள்ளே அடைச்சு எனக்குத் தலைகாணியாத் தைச்சுண்டேன்.''

வேலைக்குக் கூலி தலைகாணி! அதுவரை அவளுக்குத் தலைகாணி கிடையாது.

பக்தர்கள் பிடிவாதமாக வாங்கிப் போட்டிருந்த கட்டிலின்மீது பஞ்சு மெத்தையில் அமர்ந்து கொண்டு இந்தச் சம்பவத்தை நினைவுகூர்ந்த அம்மா, ''அந்த முரட்டுப் பாயிலே படுத்துண்டபோதும், இப்போ இந்த மெத்தையிலே படுக்கிற மாதிரியே, சௌக்கியமாத்தான் தூங்கினேன். எனக்கு ஒண்ணும் வித்தியாசம் தெரியலே, குழந்தைகளே! எனக்குக் கஷ்டம் என்பது துளிக்கூடத் தெரிஞ்சதில்லே. **அவருடைய** சேவைன்னு ஏற்பட்டுவிட்டால், அதிலே எனக்கு இம்மியும் அசௌகரியமே தெரியாது. ஒவ்வொரு நாளும் நிம்மதியா ஓடித்து; ஆனந்தமா ஓடித்து'' என்றுள்.

'அவருடைய சேவை' என்றுள்! ஆனல் ராமபிரானின் பாதத்தருகிலேயே அமர்ந்துள்ள மாருதி போல் ராமகிருஷ்ணரின் அண்மையில் இருந்தா அவள் சேவை செய்தாள்? அவரை அவள் கண்ணுலும் காணுமல் ஓடிய நாட்கள் எத்தனையோ! ஆயினும் **அவருக்காகச்** செய்கிறேம் என்ற எண்ணமே அவளை எப்போதும் உற்சாகமாக வைத்திருந்தது. எவ்விதக் கட்டுப்பாடும் இன்றித் திறந்த மடைபோல் ராமகிருஷ்ணர் தமது பக்தர்களுடன் ஒருபுறத்தில் அமளி துமளி செய்துகொண்டிருக்க, எழுபத்தைந்தே அடி தொலைவில் சகல கட்டுப்பாடுகளையும் விதித்துக் கொண்ட தேவி அந்த பக்தர்களுக்காகவும், பதி தேவருக்காகவும் செய்த அற்புத எளிமைகளைப் பார்ப்போம்! (தொடரும்)

(ஸ்தாபிதம் : 1947)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடேட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
"பாலுஸேரி பில்டிங்ஸ்", 3, சிங்கராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

தந்தி : 'EVERMANS', போன் : 85834 • தபால்பெட்டி : 414

மதராஸ் சிட் பண்டு 1961 ஆக்ட்படி கீழ்க்காணும் சீட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதராஸ் ஆக்ட் நெ. 24 OF 1961)

### நீண்டகாலச் சீட்டுகள்

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTM | ரூ. 200/- | ரூ. 10,000/- |
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ 1,000/- |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகிய காலச் சீட்டுகள்

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500 - |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375 - |

சேரும் குரூப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள் : புது டில்லி - பம்பாய் - பெங்களூர் - கல்கத்தா

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

''மேன்மை தங்கிய பிரபோ! முகமது கௌஜின் வருகிறார்!''

''ஓ.... வந்து விட்டாரா? எங்கே?'' தைமூரின் நாவிலிருந்து வெளிப்பட்ட சொற்களின் ஓசை அடங்குமுன், முகமது கௌஜின் உள்ளே நுழைந்து வணக்கம் தெரிவித்தார். கல்ல் கல்தான் கூடாரத்தின் வாசலில் நின்று கொண்டான்.

''இப்படி உட்கார் கௌஜின்!'' என்று வரவேற்றான் தைமூர்.

முகமது கௌஜின் மன்னரின் பக்கத்தில் உட்கார்ந்தார். அப்படி உட்காரும் தகுதியும், தைரியமும் அவருக்கு மட்டும்தான் இருந்தன.

''கௌஜின், என் நண்பா! பகற் போதிலிருந்து என் மூளை சரியாக இல்லை. உன்னைக் கலந்து ஆலோசிக்க மாலைப் போதில் தேடினேன். நீ காட்டாற்றின் இரகசியத்தை உணரப் போய்விட்டாய்! தைமூரின் இரகசியம் அறிந்தவனுக்குக் கேவலம் காட்டாற்று இரகசியத்தை அறிய வேண்டுமா?''

''அமீர்! எதைப் பற்றி ஆலோசிக்க என்னைத் தேடினீர்கள்?''

''பட்னீர்க் கோட்டையைப் பற்றித்தான்!''

அதுவரையிலும் அடங்கிக் கிடந்த வானம் திடுமென்று குமுறத் தொடங்கியது. கூடாரத்தின் விளிம்பில் தெரிந்த துவாரங்களின் வழியாக வானை நோக்கினான் தைமூர். ''சைத்தான் மழை! பட்னீர் என்று சொன்னாலே வெள்ளமாகப் பாயத் தொடங்கி விடுகிறது!''

முகமது கௌஜினுக்கு ஆலோசனையின் நோக்கம் புரிந்து விட்டது. அவருடைய மனத்தின் அடித்தளத்திலோ காட்டாற்று வெள்ளத்திலிருந்து அவரைக் காப்பாற்றிக் கரை சேர்த்த ரஜபுத்திர மங்கை கொலு வீற்றிருந்தாள்.

''என்ன யோசிக்கிறாய் கௌஜின்?''

''ஒன்றுமில்லை அமீர்! இந்தப் பட்னீர்க் கோட்டையை முற்றுகை இடுவது அவசியம்தானா என்று சிந்திக்கிறேன்.''

''உன் சிந்தனைக்குக் காரணம்?''

''நமது நோக்கமெல்லாம் தில்லிக் கோட்டையை அழிப்பதுதான். தௌலத்தும், அமீர்ஷாவும் இருக்கிற படைகளை அழைத்துக் கொண்டு தில்லி நோக்கிப் புறப்பட்டுவிட்டனர். நாமும் உடன் புறப்படுவது நல்லது. இந்தப் பொல்லாத மழை வேறு நமக்குச் சதி செய்கிறது.''

''மழை சதி செய்கிறதா? நீங்கள் சதி செய்கிறீர்களா?''

''யா, அல்லாஹ்! அமீர்! குரான்மீது அபரிமிதமான நம்பிக்கை கொண்டவர் நீங்கள். என்னைச் சந்தேகிப்பதுதான் சந்தேகமாக இருக்கிறது.''

''பின் ஏன், இந்தத் துர்உபதேசம்? தைமூரின் சரித்திரத்தில் இப்படி நிகழலாமா?''

''இருப்பதோ பதினாயிரம் குதிரைகள்!''

''போதாதா?''

''போதும்! அவை மழையால் வீணாகாமல் தில்லிப் போருக்குப் பயன்படுத்தலாம் அல்லவா?''

''தில்லிப் போருக்கு நான் வேறு ஏற்பாடுகள் செய்திருக்கிறேன். எனவே கௌஜின், நாளைக்குள் இந்தப் பட்னீர்க் கோட்டை விழுந்துபட உபாயம் தெரிந்தாக வேண்டும்! மழை என்ன மழை! தைமூர் குடித்து விட்டுத் துப்பும் பன்னீருக்கு ஈடாகாது!''

''அமீர்! உங்கள் நன்மைக்காகச் சொல்லுகிறேன். பட்னீர்க்கோட்டை நெடிதுயர்ந்து வலுவாகக் காணப்படுகிறது. உறுதுணையாகப் பேய் மழை! ராஜா தூல்சந்த் எந்த விதத் தகவலையும் பொருட்படுத்தாமல் இருக்கிறான். அதுவே ஒரு புதிராக இருக்கிறது. பிழைத்துப் போகட்டும் என்று அலட்சியப்படுத்திவிட்டு நாம் திரும்பினால் என்ன?''

பேயாகச் சிரித்தான் தைமூர்.

''கௌஜின்! தைமூர் சரித்திரத்தில் இப்படி ஒரு களங்கம் ஏதா?''





"இல்லை, அமீர்! தைமூரின் சரித்திரத்தில் இப்படி ஒரு கருணை ஏடு உதயம் காணும்! கோழைத்தனமாகக் கோட்டையுள் பயந்து ஒளிந்துகொண்ட ராஜா தால்சந்தின் நிலைமையைக் கண்டு தைமூர் கருணை காட்டினான் என்ற பொன் வரிகள் இடம் பெறும். இந்த நம்முடைய நாடகத்தின் மூலம், தில்லியிலும் ஓர் அதிசயமான திருப்பம் ஏற்பட்டாலும் வியப்பதற்கில்லை."

"ஓ... அப்படியா?"

"ஆமாம், அமீர்! நாம் உண்ணுகிற உணவில் அதிகப்படியை வீசி யெறிந்துவிடுவதில்லையா? அப்படியே நம் வெற்றிகளில் சிலவற்றைத் தேவையில்லாமல் தூக்கி எறிகிறோம்! வெற்றிகளில் இது ஓர் அஜீர்ணம் மாதிரி என்று நினைத்துக் கொள்வோமே...!"

"நன்றாக இருக்கிறது உன் சமையல் உதாரணம் கௌஜின்!" என்று கூறிய தைமூர் அடுத்துப் பெரும் சிரிப்பொலியுடன், "யார் அங்கே?" என்று அழைத்தான். பணியாளன் விரைந்து ஓடி வந்து தரையைத் தொட்டு வணங்கி நின்றான்.

"ஏய்... உடனே சென்று நம் சமையல்கார முட்டாள் ஹராமாலிக்கை அழைத்து வா!"

பணியாளன் காற்றென விரைந்தான்.

கண்கள் கனன்றன தைமூருக்கு! குறுந்தாடியை வழக்கம் போல் முறுக்கிவிட்டுக் கொண்டான். பின்னர் ஒரு முறை ஹுக்காவைப் பொறுக்க இழுத்துப் புகைமண்டலத்தை உண்டாக்கினான். வெளியே 'சோ'வென்று மழை பிடித்துக் கொண்டது. மின்னல் தெறித்து அடங்குமுன்னம் பணியாளன், சமையற்காரன் ஹராமாலிக்கை அழைத்து வந்து பணிந்து நின்றான். ஹராமாலிக்கோ தரையில் தலை வைத்தவாறு பணிந்திருந்தான்.

"ஏய், முட்டாள்!" — தைமூரின் குரல் ஒலித்தது.

"பிரபோ !"

"நீ அணிந்திருக்கும் கரி படிந்து அழுக்கேறிய உடைகளைக் கழற்று !"

கொஞ்சமும் தாமதியாமல் அடுப்பங்கரை உடுப்புக்களைக் கழற்றி வைத்தான் மாலிக்.

அடுத்த கணம் —

முகமது கௌஜினைத் திரும்பிப் பார்த்த தைமூர், "கௌஜின் ! உன்னுடைய உடைகளைக் கழற்றி அவனுக்குக் கொடுத்துவிட்டு. நீ அவனுடைய உடைகளை அணிந்து கொள். நீ அதற்குத்தான் லாயக்கு! ஆலோசனைக்கல்ல. இரக்க முள்ளவன் சமையற்கட்டுக்குச் சென்றால்தான், இரக்கம் எவ்வளவு வேதனை



நிரம்பியது என்பது புரியும்! தைமூருக்கா கருணை உபதேசம் செய்கிறாய்?'' என்று கூறிக் கெக்கலி கொட்டிச் சிரித்தான்; சிரித்துக் கொண்டே யிருந்தான். ''கலீல் சுல்தான்! நீ சென்று நமது திவான் முன்ஷி மௌலானா ஷம்சுத்தீனை அழைத்து வா!''

அடுத்துக் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் திவான் முன்ஷி அங்கு வந்தார். அவரைக் கடூரமாக நோக்கிய தைமூர், ''திவான்! கௌஜினுக்குரிய உரிமைகளையும், உடைமைகளையும் பறிமுதல் செய்! இக்கணம் முதல் இவன் சமையற்காரன். அதோ நிற்கும் சமையற்காரன் ஹராமாலிக் இவனுக்குச் சமையற் குருவாக இருக்கட்டும்!'' என்று கட்டளை இட்டான்.

''அமீர்!'' என்று ஏதோ கூற வாய் திறந்த திவான் முன்ஷியை இடைமறித்த தைமூர், ''திவான்! பேச்சுக்கே இடமில்லை. என் கனவு உலகையே கொள்ளையடித்து என்னுடைய தலைநகரங்களான சாமர்கண்டையும், பொகராவையும் சொர்க்கமாக்க வேண்டும். உலகமே என் ஒரு குடை நிழலில் களைப்பாற வேண்டும். கௌஜினைப் போன்றவர் அருகில் இருந்தால் என்னுடைய இந்தப் போர்க் கனவு கனவாகவே போய் விடும்'' என்று கர்ஜித்தான்.

திவான் முன்ஷி மௌலானா ஷம்சுத்தீன் திணறல் கண்டு போனார். அருமை நண்பராக அதுவரை சகலவித சுகபோகங்களுடன் வீற்றிருந்த முகமது கௌஜின், இன்று அவை யாவற்றையும் இழந்து நிற்கும் நிலை கண்டு ஆயிரமாயிரம் வீரர்கள் அதிர்ச்சி கண்டனர்.

''திவான் முன்ஷி மௌலானா ஷம்சுத்தீன்'' என்று கூவினான் தைமூர்.

''பிரபோ!'' — அருகில் வந்து அடிபணிந்து நின்றார் திவான் முன்ஷி.

''இப்படிச் செய்தால் என்ன?''

''இந்தச் சமையற்கார முட்டாள் ஹராமாலிக் இப்போது இதே உடையுடன் தூது செல்கிறான்!''

''தூது எங்கு? யாரை நோக்கி?''

''சபாஷ்! இப்படிக் கேள்! பட்னீர்க் கோட்டையை நோக்கி; தூல்சந்தைச் சந்திக்க!''

''பேஷ்! பிரமாதமான கருத்து, பிரபோ!''

''நீ புத்திசாலி! வீணில் ரஜபுத்திரர்கள் தலைகளை நான் மாலையாக அணிய வேண்டுமா? அல்லது தூல்சந்தின் தலை மட்டும் என் பாதத்தை முத்தமிடுகிறதா? இரண்டில் ஒன்றைத் தெரிந்து கொண்டு வரட்டுமே!''

திவான் முன்ஷிக்கு விவரம் புரிந்துவிட்டது. தேவையற்ற தூது இது! தன்னுடைய படைகளில் அப்பழுக்கு ஏற்படாமல் பட்னீர்க் கோட்டையை வளைக்க நினைக்கிறான் தைமூர். பார்க்கப் போனால் முகமது கௌஜின் கூறிய யோசனைக்கு இது ஒன்றும் அப்பாற்பட்டதல்ல. கௌஜின் மன்னிக்கச் சொன்னார்; தைமூர் இப்பொழுது மன்னிப்புக் கேட்கச் சொல்லுகிறான்.

''என்ன முன்ஷி ஆழ்ந்த யோசனை? இந்தத் தூது பிடிக்கவில்லையா?''

''பிரபோ! அருமையான திட்டம். ஆனால் ஹராமாலிக் விஷயம்.....''

திவான் முன்ஷி இழுத்தார். தைமூர் புரிந்து கொண்டான்: ''தைமூரின் பெருமைக்குத் திவான் முன்ஷியோ, சேனாதிபதிகள் ஷாமாலிக், கலீல் சுல்தான் நூருத்தின் போன்றவர்களோ தூது சென்றால் இழுக்கு! நாயின் பாஷை மட்டும் தூல்சந்துக்குப் புரியுமானால், நான் ஒரு நாயை — அதிலும் இழச் சொறி நாயைத் தயாரித்து அனுப்புவேன். தைமூரின் வாடை பட்டதுமே இந்த வையம் தலை வணங்க வேண்டும். அந்த நிலை விரைவில் ஏற்பட வேண்டும். உடனே ஹராமாலிக்கைத் தூதாக அனுப்பி வைக்க முனையுங்கள்!''

''சித்தம், பிரபோ! நமது முகமது கௌஜினை என்ன செய்வது?''

''சமையற்கட்டுக்கு அனுப்பி வையுங்கள். அங்கும் அரை வயிறு உணவு போடச் சொல்லுங்கள். உரிய தண்டனையை உரிய காலத்தில் வழங்குவேன்!''

வீரர்கள் நால்வர் கௌஜினை அழைத்துச் சென்றனர். அப்போது தைமூர் சொன்னான்: ''தைமூர் நினைத்ததை மாற்றுகிற சக்தி குராஹுக்குத்தான் உண்டு. வேறு எந்தச் சக்தியாலும் எதிர்க்க முடியாது.''

ஹுக்காவின் காரமான புகை தைமூரின் நெஞ்சக் குழைக்குள் இறங்கிக் கொண்டிருந்தது.

**கி.பி.** பதினான்காம் நூற்றாண்டின் இறுதிக் காலம்.

தைமூரின் வடக்கு நுழைவால் சிந்து நதியும் ஜீலம் நதியும் ரத்த வெள்ளத்தைக் கண்டன. காஷ்மீர் எல்லை முதல் காபூல் மலை வரை பரவியிருந்த கட்டோர் ராஜ்யத்தை அழித்தனர். எத்தனையோ சின்னஞ் சிறு அரசுகள், அடிபணிந்து ஓலைகள் அனுப்பின; பொன் பொருள்கள் உதவின. துலம்பாவும் முல்தானும் வீழ்ந்துவிட்டன. ஷாபுத்தின் மனைவி மக்களோடு தற்கொலை செய்துகொண்டான். மிகச் சிறிய நாட்டை ஆண்டாலும் கோகார் மரபினனான நஸரத் என்பவன் தைமூரைத் தைரியமாக எதிர்த்து வீர சொர்க்கமடைந்தான். முல்தான் மன்னன் சாரங்கானைவிட நஸரத் சரித்திரப் புகழ் பெற்றான்.

இப்படி எத்தனையோ வெற்றிகளுக்குப் பிறகு பட்னீர்க் கோட்டை முற்றுகை நிகழ்ந்தது.

பொழுது பலபலவென்று விடிகிற இளங்காலை.

நாக்கையே ஓலையாகக் கொண்டு ஹராமாலிக் குதிரையைச் செலுத்திச் சென்றான். அவனுடைய இடக் கரத்தில் தூதுக் கொடி இருந்தது.

கோட்டையின் தென் வாயில் அருகே வந்து நின்றான் ஹராமாலிக். அவனுடைய வருகையைத் திட்டி வாசலைத் திறந்து அறிந்து ரஜபுத்திர வீரர்கள் உள்ளே செல்ல அனுமதித்தனர். பின்னர் அவனை அரண்மனை நோக்கி அழைத்துச் சென்றனர். வழி நெடுகப் பார்வையிட்டான் ஹராமாலிக். எவ்வளவு அழகான நகரம்! எழிலே உருவான இளமங்கை துயிலெழுந்து காலைக் குளியல் முடித்து, சரக்கோலத்துடன் காட்சி தருகிற மாதிரியல்லவா இந்த நகரம் மழையில் நனைந்து காணப்படுகிறது!

ஹராமாலிக் அரண்மனையை அடைந்தான். ஆகா! எவ்வளவு கலை நுணுக்கத்துடன் காணப் படுகிறது இந்த அரண்மனை!

தூதுவனை வெளியில் அமர்த்திவிட்டு அரசருக்குச் செய்தி சொல்ல அரண்மனையுள் நுழைந்தனர் ரஜபுத்திர வீரர்கள்.

நெடிதோங்கி நின்ற அரண்மனையின் நடு மாடத்தில் அமர்ந்து கவலையே உருவாகிக் கிடந்தார் ராஜா தூல்சந்த். எந்த நேரத்தில் தார்த்தாரியர்களான மிலேச்சப் படையினர் தாக்க நேரிடுமோ என்று அஞ்சிக் காத்துக் கொண்டிருந்தார். எப்படியும் இன்னும் இரண்டொரு தினங்களில் தாக்குதல் ஆரம்பமாகும் என்று ஒற்றர் மூலம் அறிந்திருந்தார். அதன் காரணமாக அருமை மகளை — மறைவிடத்திலிருந்த ஜயஸ்ரீயை — வரவழைத்திருந்தார். குடிசைவாழ் பகுதியில் விட்டிருந்த அவளை நீண்ட நாட்கள் பிரிந்திருக்க முடியவில்லை. எனவே இரவோடு இரவாக அவளை வரவழைத்திருந்தார். இன்று முழுவதும் அரண்மனையில் வைத்திருந்து நல்ல உணவு படைத்து அளவளாவி அனுப்பி வைக்க நினைத்தார். போரின் திருப்பம் என்ன ஆகுமோ? ஒருகால் தோல்வி கண்டால் மரணத்தை அணைக்க நேரிடும். ரஜபுத்திர மாதர்கள் தீயில் குதித்து உயிர் துறக்கும் பயங்கரச் சூழல் ஏற்படலாம். ஆனால் மகள் ஜயஸ்ரீயின் உயிரை மட்டும் அவர் காக்க நினைப்பானேன்?

காரணம் இருந்தது. படையெடுத்து வந்திருப்பவன் இந்துஸ்தானத்தைச் சார்ந்தவனல்லன். வெளிநாட்டுக்காரன். சூறாவளி எப்படி நிலைத்து நிற்காதோ, அப்படித்தான் தைமூரும் என்றைக்காவது சாமற்கண்டு நோக்கிப் பயணமாக வேண்டியவன். அன்றைக்காவது மகள் ஜயஸ்ரீயும் அவளுடைய காதலன் அமார்சந்தும் மணம் புரிந்து இந்தப் பட்னீர்க் கோட்டையைப் புதுப்பித்து அரசாளலாம் அல்லவா?

சேவகன் வந்து நின்று, தைமூரிடமிருந்து தூது வந்திருப்பதாக அறிவித்தான். செய்தியறிந்து ஒரு கணம் மனம் துணுக்குற்றுக் கவலித்தார் தூல்சந்த். பின்னர் தூதுவனை அழைத்து வரும்படி ஆணை பிறப்பித்தார்.

சற்றைக்கெல்லாம் தூதுவனாக வந்த ஹராமாலிக் வந்து நின்று வணங்கினான்.

"தூதுவரே! என்ன செய்தி?" ராஜா தூல்சந்த் ரஜபுத்திர மிடுக்குடன் கேட்டார்.

ஹராமாலிக் சொன்னான்: "ராஜ்! எங்கள் குலச் சக்கரவர்த்தி, அகில உலகத்தை ஒரு குடை நிழலில் ஆளப் புறப்பட்ட சிங்கம்— அமீர் தைமூர் நல்ல நோக்கத்துடன் தூது அனுப்பியிருக்கிறார்."

"என்ன அந்த நல்ல நோக்கம்? ரத்தத்தைக் களங்கப்படுத்தாத அளவுக்கு எதுவானாலும் ரஜபுத்திர வம்சம் ஒப்புக்கொள்ளும்."

"ராஜ்! நீங்கள் உடனடியாகச் சரணடைய வேண்டும். உங்கள் கோட்டையில் இருக்கும் பொன் பொருளைக் காணிக்கையாக்க வேண்டும். தவறினால்..."

"தவறினால்?"

"கோட்டை தரை மட்டமாகும்!"

"தூ... மூடு வாயை; யார் எதிரில் எதைச் சொல்லுகிறாய்?"

**கிறுக்கெட்!**



" இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே நடந்த ஐந்தாவது சண்டையின் இறுதி நாளான இன்று நம் படையினர் ஆறு விக்கெட் நஷ்டத்துக்கு நூறு விமானங்களைச் சுட்டு வீழ்த்தினார்கள். மேஜர் 'லபக்சிங்' ஆறு பாராசூட்களை 'காட்ச்' பிடித்தார். பாகிஸ்தானியர் சுட்ட குண்டுகள் பௌண்டரியைத் தாண்டவில்லை. இன்று சண்டை டிராவில் முடிந்தது. இந்திய காப்டன் 'மானெக்ஷா' எல்லோரையும் பாராட்டினார்."

என்ன விழிக்கிறீர்கள்? கிரிக்கெட் காமெண்டரி கூறும் ஒருவரைச் செய்தி அறிவிப்பாளராக நிலையம் என்று நியமித்ததன் விளைவுதான் இது!

-- கோட்டா மோகன்

"நாங்கள்....."

"யாராயிருந்தாலும் கவலை இல்லை. தூதுவரே! நீங்கள் தூதுவராக வந்ததனால் உயிருடன் அனுப்பி விடுகிறோம். இல்லையென்றால் தைமூரின் படையில் ஒருவன் குறைந்தான் என்ற கணக்கில் தலையைச் சீவியிருப்போம். நாங்கள் பண்பானவர்கள். தூதுவரை வதை செய்ய மாட்டோம். போய்ப் போர் முரசம் கொட்டச் சொல் உங்கள் தைமூரை! தைமூருக்கு வீரம் விலைக்கு வாங்கியதாக இருக்கலாம். எங்களுக்கு அது ரத்தத்துடன் பிறந்தது. போகலாம்."

"ராஜ்! தூதுக்கு நீங்கள் ஒப்பவில்லை என்றால் ஒரு செய்தியைச் சொல்லச் சொன்னார் எங்கள் தைமூர்!"

"என்ன அது?"

"என் உயிரை நீங்கள் எடுத்துக் கொண்டாலும் கவலையில்லை. நான் சொல்லியே தீருவேன். நான் யார் தெரியுமா?"

"யார்?"

"அமீர் தைமூர் அவர்களின் சமையற்காரன்! உங்கள் மதிப்புக்கு ஒரு சமையற்காரனைத்தான் தூதாக அனுப்ப முடியும் என்று சொல்லச் சொன்னார் எங்கள் மாட்சிமை மிகுந்த தைமூர்!"

"ஹா...." — ஆத்திரத்தை அடக்கிக் கொண்டார் ராஜா தூல்சந்த். புறங்கை காட்டிப் போகுமாறு சமிக்ஞை செய்தார். ஹராமாலிக்கும் புறப்பட்டான். அவனைப் பாதுகாப்புடன் கோட்டைக்கு வெளியே கொண்டு போய் விட்டனர் ரஜபுத்திர வீரர்கள்.

அரண்மனை மேன் மாடத்திலேயே வெகு நேரத்துக்கு வெகு நேரமாக உலவிக் கொண்டிருந்தார் ராஜா தூல்சந்த். மேற்கொண்டு கவனிக்க வேண்டியவை போர் ஆயத்தங்கள். ஆனால் அவற்றில் அவருக்குக் கவனம் செல்லவில்லை. வெற்றி எந்த வழியிலும் கிட்டப்

போவதில்லை. கிடைக்கப் போவது வீர சொர்க்கம். மகிழ்ச்சியுடன் அணைப்போம் என்ற துணிவு அவருடைய நடையின் ஒவ் வோர் அடியிலும் எதிரொலித்தது. அந்த நேரத்தில்தான் நூபுரத்தின் ஓசை 'கலீர் கலீர்' என்று ஒலிக்க அருமை மகள் ஜயஸ்ரீ வந்து கொண்டிருந்தாள். மகளின் வரு கையை வெறுமையாகத் திரும்பிப் பார்த் தார் ராஜா தூல்சந்த்.

''அப்பா! தைமூர் தூது அனுப்பி வைத் தானுமே!'' — ஜயஸ்ரீயின் குரலில் அலட் சியம் தென்பட்டது.

''நம் மானத்தை விலை பேசத் தூது வந்தது.''

''விளக்கமாகத்தான் சொல்லுங்களேன், அப்பா!''

வேதனையும் சோதனையுமாக நடந்ததை விளக்கினர் ராஜா தூல்சந்த். முடிவாகச் சொன்னர்: ''அம்மா, ஜயஸ்ரீ! நீ அன்றைக்கு அவன் கழுத்தை முறித்துப் போட்டிருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தால் இந்தத் தொல்லைக்கே இடமில்லாமல் போயிருக்கும்!''

''காட்டாற்று வெள்ளத்தில் காப்பாற்றப் பட்டவன் தைமூர்தான் என்பது என்ன நிச்சயம் அப்பா?''

''எவனே, அவன் தார்த்தாரியன் என்பது புரிந்ததில்லையா?''

''ஆபத்தில் உதவுவது இந்துஸ்தானத்தின் தருமம் அப்பா! இரக்கம் இந்த மண்ணுக்குச் சொந்தமானது!''

''இப்படி ஆபத்துக்கு உதவுவது, இரக்கம், தருமம் பேசித்தான் இந்த மண்ணே சுடு காடாகிக்கொண்டு வருகிறது'' என்றார் மன் னர் தூல்சந்த்.

அப்போது வேகமாக மூன்று வீரப் பணி யாளர்கள் ஓடோடி வந்தனர். ''மகாராஜா! தைமூரின் படைகள் கையில் தீப்பந்தங்களை ஏந்திய வண்ணம் கோட்டையைச் சுற்றி நெருங்கிக் கொண்டிருக்கின்றன.''

செய்தி கேட்டுச் செய்வதென்ன வென்று புரியாமல் அதிர்ந்து போனர் ராஜா தூல் சந்த். உடனே மேன் மாடத்து உச்சிக்கு விரைந்து சென்று கவனித்தார்.

தொலைவில் தீப்பந்தங்கள் வரிசை கட்டிக் கோட்டையை நெருங்கிக் கொண்டிருந்த காட்சி தெரிய வந்தது. கோட்டையைச் சுற்றிலும் தீ வளையம் ஒன்று சுழலுவதுபோல் பிரமை தட்டியது. மனத்திலும் தீப்பிடிக்கத் தொடங்கி விட்டது. இனிமேல் தாமதிக்க ஒன்றுமே இல்லை. எந்த மகளைக் காத்து விடுவோம் என்று திட்டம் வகுத்தாரோ, அந்தத் திட்டத்துக்கும் தீப்பிடித்து விட்டது. ஏன் அவளைக் குடிசைவாழ் பகுதியிலிருந்து அழைத்து வந்தோம் என்றாகி விட்டது. இனி மேல் அவளைத் தப்பிக்கச் செய்வது இய லாத காரியம். அவளும் தன்னுடன் மாள வேண்டியதுதான். எதிர்த்துப் போராட ஆயத்தமாகுமாறு உத்தரவிட்டார் ராஜா தூல்சந்த்.

உத்தரவு கிடைத்த ஒரு விநாடிப் போது நேரத்தில் கோட்டையே பரபரப்பில் ஆழ்ந்து விட்டது. இப்படி நள்ளிரவுப் போதில் இந்த நிலை ஏற்படும் என்று யாரும் எதிர்பார்க்க வில்லை.

தீப்பந்தங்களுடன் நெருங்கி வந்த தைமூரின் படைவீரர்கள், உடும்பின் முது கில் கயிறுகளைக் கட்டிக் கோட்டை மீது எறிந் தனர். உடும்புப் பிடியின் உதவியால் கயிறு களில் வீரர்கள் ஏறத் தொடங்கினர். அவர் களை ஏற விடாது ரஜபுத்திர வீரர்கள் தடுத்து நிறுத்தும் வீரப் பணியில் இறங்கினர். கோட்டை அகழியின் காரணமாக முதலில் படை வீரர்கள் சிலர் பலியாயினர். அகழி யைக் கடக்க முயன்றனர். பின்னர் ஒரு கயிற்றுப் பாலமே உருவாகி விட்டது. சிந்து நதிக்கே பாலம் கட்டியவர்களுக்குப் பட்னீர் அகழி எம்மாத்திரம்?

பொழுது விடிவதற்குள் தைமூரின் இராக்ஷஸ பலம் கொண்ட வீரர்கள் கோட்டை மதிலைத் தாண்டி விட்டனர். கதிரவன் கிழக்குக் கபாடத்தைத் திறக்கவும், கோட்டையின் தலைக் கதவம் திறக்கவும் சரியாயிருந்தது.

நள்ளிரவுப் போதில் இலேசாக விடுபட் டிருந்த மழை மறுபடியும் பிடிக்கத் தொடங்கி விட்டது. மழையைச் சட்டை செய்ய வேண் டுமே! பேய் இரைச்சலுடன் தைமூரின் படைகள் கோட்டையினுள் நுழைந்து அதா கதம் செய்யத் தொடங்கி விட்டன.

திடகாத்திரமான புரவி மீது அமர்ந்து முடமான காலை ஒருக்களித்துக் கொண்ட தைமூர், சூறாவளி போலச் சுற்றி வந்தான். அவனுடைய கையிலிருந்த கனத்த பட்டை வாள் மந்திரமாகச் சுழன்றது. அதன் சுழற்சியில் எத்தனையோ தலைகள் பனங்காய் களைப் போலத் தரையில் விழுந்து உருண்டு ஓடின. ரஜபுத்திர வீரர்களும் தங்கள் உட லில் ஒரு சொட்டு வீர இரத்தம் இருக்கும் வரையில் உணர்ச்சியுடன் போராடினர். எங் கும் அவல ஒலிகள் எழுந்து மழையொலி யுடன் கலந்து பயங்கரச் சூழலை உண்டு பண்ணின.

இரு நாட் போதுக்குள்—

பட்னீர்க் கோட்டையின் அத்தியாயம் பரி தாப வரிகளுடன் முடிந்தது.

**ம**ழை நன்றாகவே ஓய்ந்து விட்டது. எங் கும் ரத்த வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. மனித சடலத்தின் உறுப்புக்கள் மிதந்து சென் றன. துர்நாற்றம் ஒரு காத தொலைவைத் தாண்டி வீச்சம் கொடுத்தது.

பிறைக் கொடி கம்பீரமாகப் பறந்தது. பட்னீர்க் கோட்டை தரை மட்டமானது. சிற்சில இடங்கள் மழையிலும் எரியுண்டு கருகின. எங்கும் புகை மண்டலம். மழைக்கு ஏதுவாகப் புகை வானைக் கப்பத் தொடங் கியது.

ராஜா தூல்சந்த் வமிசப் பெண்கள் தீ வளர்த்துக் குதிக்க இயலாததால் தற்கொலை செய்து கொண்டனர். ராஜா தூல்சந்தும், மகள் ஜயஸ்ரீயும் இம்முயற்சியில் ஈடுபடுகிற போதுதான் சிறைப்பட நேர்ந்தது. அவர்களை விலங்கிட்டுக் கொண்டு சென்றனர். அப் போது வழியில் ஜயஸ்ரீ கண்ட காட்சி...

இதயத்தை உலுக்கியது.

எழில் கொஞ்சும் தங்க, வைர நகைகள்

சோட்டாபாயின்
கைவினைச்
சிறப்புப்
படைப்பு

சோட்டாபாய் & கம்பெனி
அரசினர் அங்கீகாரம் பெற்ற
மதிப்பாளர்கள்
தங்க. வைர. நகை வியாபாரிகள்
191, நேதாஜி போஸ் ரோடு
(ஏர்கண்டிஷண்ட் ஷோரூம்)
சென்னை-1.
போன்: 32024

அமிர்தாஞ்சனம் தலைவலி, ஜலதோஷம், தலைவலி, களுக்கு இவற்றிலிருந்து விரைவில் குணமளிக்கிறது. உபாதை ஏற்பட்டுள்ள இடத்தில் சிறிதளவு அமிர்தாஞ்சனம் தடவி துரித நிவாரணம் பெறுங்கள். 75 வருடங்களாக குடும்பங்களில் பயன்பட்டுவரும் நம்பகமான நிவாரணி அமிர்தாஞ்சனம், எப்போதும் ஒரு பாட்டில் கைவசம் இருக்கட்டும். சிக்கனமான ஜாடிகளிலும் கைக்கு அடக்கமான டப்பாக்களிலும் கிடைக்கின்றன. 10 மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற நிவாரணி.

அமிர்தாஞ்சனம் லிமிடெட்

உடல் வலியா?

AM-5982A

# அமிர்தாஞ்சனம்

## விரைவில் குணமளிக்கிறது!




ஆண்மை—
திடவடிவம்,
தீரம், திறமை,
கம்பீரம்.
ஆண்மையின்
பன்முகப்
பண்புகளைப்
படித்தறிந்த
படைப்பு
'எஸ்டர்காட்'

MAFATLAL GROUP

**எஸ்டர்காட்®**

ஆண்மகன் இதோ ஆளவருகிறான், எங்கும் அவன் செங்கோல். 'எஸ்டர்காட்' அவன் உடுப்பு.

'எஸ்டர்காட்' பாலியெஸ்டர் இழை கலந்த காட்டன் சூட்டிங்குகள்.

தவிர, இளம் சாயல்களிலும், எடுப்பான வண்ணங்களிலும், பெருமிதப் பிரிண்டுகளிலும் 'மெ:ப்ரின்' 100% பாலியெஸ்டர் சேலைகள், பாலியெஸ்டர் இழை கலந்த காட்டன் சேலைகள், 'மெ:ப்ரின்' பாலியெஸ்டர் இழை கலந்த உடுப்புத் துணிகள்—

இலேசான வாயில்கள், கோடை நிழல் படரும் கேம்ப்ரிக்குகள், கோலாகல நகை விரிக்கும் பாப்ளின்கள்; அதி நவீனமான அரும்பெரும் அழகு வண்ணங்களிலும், பிரிண்டுகளிலும் 'டெரோவேல்' பாலியெஸ்டர் இழைகலந்த காட்டன் ஷர்ட்டிங்குகள்.

**மபத்லால்
க்ரூப்**



ரெடிமேட் ஷர்ட்டுகள் வாங்கும்போது தரமான மபத்லால் உடைகளுக்கான 'ஸ்மார்ட்டி' சின்னம் இருக்கிறதா பாருங்கள்!

AIYARS-M.173 TM

போரில் தினவெடுத்து ஈடுபட்டுவிட்ட அமர்சந்த், வீரசொர்க்கம் அடைந்து காணப் பட்டான். அவனுடைய உடல் இரு துண்டங் களாகி யிருந்தது.

ஜயஸ்ரீ 'கோ'வென்று கதறி அழுதுவிட் டாள். அவளுடைய அந்த ஒப்பாரியைச் சட்டைசெய்யாத தார்த்தாரிய வீரர்கள், அவ ளைத் தரதரவென்று இழுத்துச் சென்றார்கள்.

அரண்மனைக் கொலுமண்டபத்து அரியணை யில் கம்பீரமாக அமர்ந்திருந்தான் தைமூர். எந்த அரியணையா யிருந்தாலும் அதில் ஏறிப் பார்த்து மகிழ்ந்துவிட வேண்டும் என்கிற கொள்கையும், அழுத்தமான முயற்சியும் உடையவனாயிற்றே மாவீரத் தைமூர்! அவன் கெக்கலி கொட்டி வெற்றிச் சிரிப்புச் சிரித் தான். அப்போதுதான் கையில் விலங்கு களுடன் ராஜா தூல்சந்தையும், ஜயஸ்ரீயை யும் அழைத்து வந்தனர் வீரர்கள்.

''ஓ...இவன்தான் தூல்சந்தோ?'' என்று வீராவேசத்துடன் கேட்டான் தைமூர்.

''ஓ... நீதான் தைமூரோ?'' என்று அலட்சியமாகக் கேட்டார் ராஜா தூல்சந்த்.

வலது கரத்தால் தொடையில் ஓங்கி ஒரு குத்துவிட்டுப் பேய் போலக் கடகடவென்று நகைத்தான் தைமூர். பிறகு, ''தைமூரைப் பார்த்ததில்லையல்லவா நீ? இதோ நான்தான் தைமூர். நன்றாகப் பார்!'' என்று கூறிவிட்டு மீண்டும் அதே கர்ஜனை நகை புரிந்தான் தைமூர்.

''நன்றாகப் பார்ப்பதற்கு நீ என்ன சரித்திர மகாபுருஷனா?''

''சந்தேகமென்ன? இந்தத் தைமூர் கை பட்டதால் சரித்திரம் உன்னையும் நினைவுகூரும் துர்ப்பாக்கிய நிலைமையை அடைகிறது.''

''ராட்சதர்களுக்கு எப்போதுமே கௌர வம் கிடைக்காது. நான் ரஜபுத்திரன்!''

''ஓகோ! அதனால்தான் நான் உனக்கு என் சமையற்காரனைத் தூது அனுப்பினேன்.''

''உன் தூதையே நான் சட்டை செய்ய வில்லை; உன் சமையற்காரனைப் பற்றி எனக் கென்ன கவலை?''

''இன்னும் உன் திமிர் அடங்கவில்லை?''

''அடிபட்டாலும் புலி புலிதான்!''

''நீ புலியா?''

''இல்லையா?''

''நான் எலி என்றுதான் நினைத்து வந்தேன்.''

''அப்படி என்றால் எலியைப் பிடித்த நீ ஒரு பூனையாகத்தான் இருக்க முடியும்! நான் யானை என்று தவறாக நினைத்து விட்டேன்.''

''உன் புத்திசாலித்தனமான பேச்சைக் கேட்டு மெச்சுகிறேன்!''

''இந்துஸ்தானத்தில் முட்டாள்களுக்குத் தான் பஞ்சமுண்டு.''

''தூல்சந்த்! மகா புத்திசாலியே! உன் புத்தியை நீ கொஞ்சம் பயன்படுத்தினால் உன் நாடு பிழைக்கும்; நீ பிழைப்பாய்; உன் மகள் பிழைப்பாள்!''

தூல்சந்த் ஏதோ கூற வாய் திறந்தபோது இடைமறித்து ஜயஸ்ரீ கேட்டாள்: ''என்ன அது?''

தைமூரின் கழுகுக் கண்கள் ஜயஸ்ரீயைக் கொத்தின. வாய் அசைந்தது. ''ஆகா! எவ்வளவு இனிமையான குரல்! அழகுக்கு மேலும் அழகு சேர்க்கிறது!''

''கவிதாஞானமற்ற உனக்கு ரசனைவேறா?''

''எந்த முட்டாள் சொன்னான் அப்படி?''

''எங்கள் நாட்டில் முட்டாள்களுக்குப் பஞ் சம் என்று சொல்லியும் இந்தக் கேள்வியைக் கேட்கலாமா, சாமர்கண்டு பூமானே?''

''உன் பெயர்?''

''ஜயஸ்ரீ!''

''பொருள்?''

''வெற்றித் திருமகள்!''

''தோல்வி கண்டு நிற்கிறாய்!''

''நிலவை ராகு விழுங்குவதாலேயே அதன் ஒளி குறைந்துவிடுவதில்லை; அழிவதுமில்லை.''

''புரியவில்லை.''

''சாமர்கண்டில் புத்திசாலிகளுக்குப் பஞ் சம் போலும்! உன் வெற்றி ஒரு வெற்றியல்ல என்று கூறுகிறேன்.''

''உங்கள் முடிவு?''

''நீயே கூறலாம்.''

''கூறுகிறேன், கேள்!'' என்று கூறிய தைமூர், உரத்த குரலில் ''கலீல் கல்தான்!'' என்று அழைப்புக் கொடுத்தார். சேனைத் தலைவர்களுள் ஒருவனான கலீல் கல்தான் அருகே வந்து வணங்கி நின்றான்.

''கலீல்! உடனே சென்று அந்த முட்டாள் முகமது கௌஜியை அழைத்து வா!'' என்ற உத்தரவு தைமூரின் தடித்த நாவில் இருந்து பிறந்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் இரண்டு காவல் வீரர்கள் முகமது கௌஜியைக் கொண்டு வந்து நிறுத்தினார்கள்.

கௌஜியைக் கண்ட ஜயஸ்ரீ மலைத்து நின்று விட்டாள். அவள் மட்டுந்தானா மலைத்துப் போனாள்? கௌஜிக்கும் உண்மை புரிந்து இதயத் துடிப்பே நின்றுவிடும்போல் இருந் தது. தன்னைக் காட்டாற்று வெள்ளத்தில்

## குற்றத்துக்குப் பரிசு!



இங்கிலாந்து ராணியின் அரண்மனையான 'பக்கிங் காம் அரண்மனை'யைச் சேர்ந்த ஒரு வேலைக்கார மாது, சிறிது ஓய்வெடுக்க ஒரு நாற்காலியில் உட் கார்ந்தாள். அவ்வளவுதான், அந்த நாற்காலி உடைந்துவிட்டது! அது வெளிநாட்டு விருந்தினர் உட்காரும் நாற்காலி. வேலைக்காரிக்குத் தன் வேலைக்குச் சீட்டு கிழிந்துவிட்டது என்பது நிச்சயமாகி விட்டது. இருப்பினும் நடந்ததை அதிகாரிகளுக்கு அறிவித்தாள். சில தினங்களுக்குப் பின், அம்மாது வுக்கு ஆனந்தமளிக்கும் அதிர்ச்சி காத்திருந்தது. அதிகாரிகள் அவளுக்குப் பாராட்டு தெரிவித்தனர். ''நீங்கள் அப்படி உட்காராமல் இருந்திருந்தால், அந் நாற்காலி பலவீனமடைந்திருப்பது தெரியாமலே போயிருக்கும். அதில் அயல்நாட்டு விருந்தினர் யாராவது உட்கார்ந்தபோது, உடைந்து அரசின் மானத்தைக் கப்பலேற்றியிருக்குமே!'' என்றனர் அன்பாக!

- சம்பத்குமாரி

காப்பாற்றிய இந்தப் பெண்ணா ராஜா தூல் சந்தின் மகள்? அரச குமாரியா?

"என்ன கௌஜின். இப்பெண்ணை அப்படிப் பார்க்கிறாய்? இவளை நீ இதற்கு முன்னால் பார்த்திருக்கிறாயா?" என்றான் தைமூர்.

"இல்லை, அமீர்! இவளைப் பார்க்கும்போது எனக்கு ஒரு பரிதாபம் ஏற்படுகிறது. அவ்வளவுதான்."

"முட்டாள்களுக்கு ஏற்படக் கூடிய சகஜமான பரிதாபம் உனக்கு ஏற்படுவதில் ஆச்சரியமில்லை" என்று கூறி நிறுத்திய தைமூர், சற்றே தலையைத் திருப்பி ஜயபூரீயை நோக்கினான்: "பெண்ணே! முடிவைக் கூறுகிறேன் கேள். உங்களுக்கு இழந்த நாடு தேவையானால் உன் தந்தை என் காலை முத்தமிட வேண்டும். அல்லது இன்னும் கொஞ்ச நேரத்தில் இழக்கப் போகிற உங்கள் உயிர் மட்டும் தேவையென்றால், அதோ நிற்கும் வீரன் ஒருவனின் உடைவாளை உருவி, இதோ நிற்கும் இந்தப் பரிதாபத்துக்குரிய கௌஜினுடைய உயிரை உன் கையாலேயே பறிக்க வேண்டும். உனக்காகப் பரிதாபப்பட்டவன் அல்லவா அவன்?"

ஜயபூரீ வெறுமையாகச் சிரித்தாள்: "என் தந்தை உன் ரோகக் காலை முத்தமிடுவதா?"

"பெண்ணே!" என்று கர்ஜித்தான் தைமூர். "உயிரையாவது காப்பாற்றிக் கொள்ள முயற்சி செய்!"

"அதை வேண்டுமானால் செய்யலாம். செய்யுமுன் ஒரு விளக்கம் தேவை."

"என்ன?"

"என் கையால் உயிரை நீக்க இருக்கும் இவர் என்ன பாவம் செய்தார்?"

"அவசியம் தெரிய வேண்டுமா?"

"தெரிந்தால் நல்லது. எனக்கும் ஒரு நிறைவு வேண்டாமா?"

"சொல்கிறேன் கேள். பட்னீர்க் கோட்டை மீது போர் தொடுக்க வேண்டாம் என்று எனக்குப் புத்திமதி புகட்டினான். இப்போது உன்னைக் கண்டு பரிதாபப்படுவதாகச் சொல்கிறான்...!"

"மன்னிக்க முடியாத குற்றம்."

"அப்படிச் சொல்!" என்று கடகடவென்று சிரித்தான் தைமூர்.

கௌஜினை நெருங்கிய ஜயபூரீ, "பெரிய குற்றத்தைப் புரிந்துவிட்ட சிறிய மனிதரே! நீங்கள் இந்தத் தைமூருக்கு ஆலோசகராக இருக்கலாமா? காட்டாற்று வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டு தவித்த உங்களை ஏன் காப்பாற்றினேன் என்று இப்போது வேதனைப் படுகிறேன். நீங்கள் தைமூரின் ஆள் என்று தெரிந்தும் உங்களைக் காப்பாற்றி, உயிருடன் அனுப்பி வைத்தது எத்தனை பெரிய தவறான செயல் என்பதை எண்ணி வெட்கப்படுகிறேன். நான் யார் என்று உங்களுக்கு அப்போது தெரியாது. இப்போது தெரிந்து கொள்ளுங்கள். நான் பட்னீர்க் கோட்டையின் இளவரசி! எங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளாமல் எங்களுக்காக நீங்கள் ஏதோ முன் பிறவித் தொடர் இணைப்பின் உந்தலால் பரிதாபப் பட்டாலும், நான் உங்களுக்காகப் பரிதாபப்படுவதாக இல்லை. ஏனென்றால், பரிதாபப்பட்டு எங்களால் ஆகப் போவது என்ன?" என்று கண்ணீருடன் கூறிய மறு கணமே வாளை நிமிர்த்தித் தன்னுடைய மார்பில் ஆழப் பாய்ச்சிக் கொண்டு துடி துடித்த வண்ணம் தரையில் சாய்ந்தாள்.

சற்றும் எதிர்பாராத இந்த முடிவைக் கண்டு பதைபதைத்து, "மகளே, ஜயபூரீ!" என்றலறிப் புடைத்த வண்ணம் அருகே ஓடி வந்து தாங்கிக் கொண்டார் ராஜா தூல்சந்த்.

"அப்பா! கொடியவனான தைமூர் படைக்குள்ளும் ஒரு மனிதனைக் கண்டுவிட்ட நிறைவு எனக்கு ஏற்பட்டு விட்டது. அதனால்தான் என் உயிர் எனக்குப் பெரிதாகத் தோன்றவில்லை."

ஜயபூரீயின் தலை சாய்ந்தது. ராஜா தூல் சந்த், உத்தரீயத்தால் வாய் புதைத்துக் குலுங்கிக் குலுங்கி அழத்தொடங்கினார். எதிர் நின்ற முகமீது கௌஜின் கண்களைக் குளமாக்கிக் கொண்டு, "யாஹ், அல்லாஹ்.... எங்களை மன்னிப்பாயாக!" என்று கூறிக் கொண்டே மண்டியிட்டுத் தலைவணங்கினார்.

இலேசாக ஒரு காலை மெல்ல ஊன்றி ஊன்றி நடந்து வந்த தைமூர், இறந்துகிடந்த ஜயபூரீயை உற்றுக் கவனித்தான். "நல்ல நெஞ்சுத் துணிவு மிக்கவள். தார்த்தாரிய மரபில் பிறந்திருக்க வேண்டியவள்; தவறி ரஜபுத்திர மரபில் பிறந்து விட்டாள்" என்று கூறிக் கொண்டே பெருத்த நகைப்புடன் மேலே இருந்த உத்தரீயத்தை இழுத்து ஜயபூரீயின் பிணத்துக்குப் போர்த்தினான்.

தைமூரின் கண்களில் நீர் திரையிட்டுக் காணலாம் என்று எதிர்பார்த்த அனைவருக்குமே ஏமாற்றம்தான்!

உலகத்தின் கண்களைக் கலங்க வைக்கப் பிறந்தவனாயிற்றே தைமூர்! அவனுடைய அகன்ற கண்கள் கலங்கும் என்று எதிர் பார்க்க முடியுமா?



< "மன்னிக்கணும் சாமி! இத்தனை காரியரில் எதை உங்க விட்டில் கொடுத்தாங்கன்னு மறந்து போச்சு! உங்களுக்கு அடையாளம் தெரியாதா?"

"எதுவா யிருந்தாலென்ன? வெங்காய சாம்பார், உருளைக்கிழங்கு கறி உள்ள காரியரைக் கொடு. அது போதும்!"

ஹாஸ்ய சித்திரக்காரர்: ஏண்டா, என் பையனா யிருந்தும் என் 'ஜோக்'கைக் கேட்டுச் சிரிக்க மாட்டேனென்கிறாய்? >

மகன்: நான் ஒரு பத்திரிகாசிரியர் ஆக முயற்சி பண்ணிண்டிருக்கேன், அப்பா!



# வணக்கம் வாசகியம்மா?

(தியாகராயநகர், ரங்கநாதன் தெருவில் 'லிப்கோ' எனப்படும் 'தி லிட்டில் ஃப்ளவர் கம்பெனி' கட்டடம்.

முன்னிரவு நேரம்.

மெர்க்குரி விளக்கின் ஒளி பட்டு முகப்பிலுள்ள 'பூரங்கம்' என்ற கட்டடத்தின் பெயர் பளிச்சிட்டது. புத்தகங்கள் வாங்க வருவோரும், வாங்கிக் கொண்டு திரும்புவோருமாக இருக்கும் வேளையில் ஜுபிடர் பிரஸ் டைரக்டர்களில் ஒருவரான ஸ்ரீ டி. வி. வேங்கடராமனும், ஸ்ரீமதி லலிதா வேங்கடராமனும் வந்தார்கள். 'புரூப்' திருத்திக் கொண்டிருந்த லிப்கோ பாகஸ்தர்களில் ஒருவரான திரு வரதன், திரு வேங்கடராமன் தம்பதியை வரவேற்று, மாடிக்கு அழைத்துச் சென்றார்.

ஏற்கனவே பரிச்சயமான பிரகாரகர்த்தர் திரு வரதனும், அச்சக அதிபர் திரு வேங்கடராமனும் ஒருபுறம் பேசிக் கொண்டிருக்க, மறுபுறம் ஸ்ரீமதி லலிதா வேங்கடராமனும் ஸ்ரீமதி பத்மாவதி வரதனும் உரையாடத் தொடங்கினார்கள்.)

ஸ்ரீமதி லலிதா வேங்கடராமன்: கதைகளில் மட்டும்தான் எதிர்பாராத சம்பவம் நடக்குமென்பதில்லை. நிஜ வாழ்விலும் நடக்கும்! பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது கட்டுரைப் போட்டியில் 'சங்க காலப் புலவர்கள்' என்ற புத்தகத்தைப் பரிசாகப் பெற்றேன். பின்னால் அந்தப் புத்தகத்தைத் தயாரித்த அச்சகத்தின் அதிபரையே திருமணம் செய்து கொண்டேன்.

ஸ்ரீமதி பத்மாவதி வரதன்: ஓகோ! இது உங்களுக்கு மட்டும்தான் என நினைக்க வேண்டாம்! எந்தப் பிரகாராலயத்தின் 'சோஷியல் ஸ்டடீஸ்' நோட்டைப் படித்துப் பரீட்சை தேறினேனோ, அதே பிரகாரகர்த்தர் குடும்பத்துக்கு மருமகளாக வந்து சேர்ந்து விட்டேன் நான்!

இவ்வாரம் உரையாடலில் பங்குகொள்வோர்:

**ஸ்ரீமதி பத்மாவதி வரதன்**
**ஸ்ரீமதி லலிதா வேங்கடராமன்**



திரு வரதன்

திரு வேங்கடராமன்

அச்சகமும், பதிப்பகமும் ஆரம்பமானபோது நாம் பிறந்துகூட இருக்க மாட்டோம்!

லலிதா: சரியான வார்த்தை! 1933ல் பிராட்வேயில் ஆரம்பித்த அச்சகம் இப்போது தேனாம்பேட்டையில் நடந்து வருகிறது. என் மாமனார் டி. கே. வெங்கடேசன், திரு சாம்பமூர்த்தியுடன் சேர்ந்து ஆரம்பித்தார்களாம்.

பத்மா: எங்கள் 'லிப்கோ'வையும் என் மாமனார் திரு வி. கிருஷ்ணசாமி சர்மா அவர்கள்தான் 1929ல் ஆரம்பித்தார்.

லலிதா: எங்கோ படித்த ஞாபகம், உங்கள் மாமனார் 'லிப்கோ'வை ஆரம்பிக்க ஒரு பாதிரியார் அன்பும் நல்லாசியும் வழங்கினாராமே?

பத்மா: ஆமாம். வெர்ஜூர் பாதிரியார் (Rev. Father P. Verdure) தான். அவரது படத்தைப் புத்தக விற்பனைப் பகுதியில் இன்றும் மாட்டியிருக்கிறோம்.

நீங்கள் அச்சகத்துக்கு அடிக்கடி போவதுண்டா?

லலிதா: அநேகம் தடவை போயிருக்கிறேன். சொல்லப் போனால் 'சூப்பர் மார்க்கெட்' போக வேண்டியிருக்கும் போதெல்லாம் இங்கும் போவேன்! இரண்டும் அருகருகேதானே இருக்கின்றன.

லிப்கோ புத்தகங்களின் எண்ணிக்கை எவ்வளவு இருக்கும்?

பத்மா: ஏறக்குறைய எழுநூறு இருக்கும். இருநூறுக்கு மேல் பக்தி சம்பந்தமான புத்தகங்கள். மற்றும் பல மாணவர்களுக்கான நூல்கள்.

இரு இல்லத்தரசிகளின் சந்திப்பு

லலிதா: 'லிப்கோ'வில் சிறுகதைத் தொகுப்புகள், நாவல்கள் போன்றவற்றை ஏன் பிரசுரிப்பதில்லை?

பத்மா: சிறுகதைகள், நாவல்களைப் போடப் பிரகாராலயங்கள் ஏராளமாய் இருக்கின்றனவே. நாங்கள் வேறு எதற்கு அதையே செய்ய வேண்டும்? தெய்வீக சம்பந்தமான புத்தகங்களுக்கும் இப்போது கிராக்கி அதிகம் ஏற்பட்டிருக்கிறது. மேலும் சுமார் பதினைந்து வருஷங்களுக்கு முன்னால் காஞ்சி ஆசாரிய சுவாமிகள் சென்னை வந்திருந்தபோது இந்தக் கட்டடத்துக்கும் வந்திருந்து நல்லாசிகள் வழங்கி, என் மாமனாரிடம் பக்தி சம்பந்தமான புத்தகங்களைப் போடும்படி தெரிவித்தார்.

ஸ்ரீ ராமாயண பாராயணமும் சகல காரிய சித்திகளும்



என்ற நூல் காஞ்சி ஆசார்ய ஸ்வாமிகளின் அநுக்கிரகத்துடன் வெளியிடப்பட்டதாகும். சொல்லப் போனால் அந்தப் புத்தகத்தைப் படித்த பிறகுதான் எனக்கு இந்தப் பிரசுர கர்த்தர் வீட்டில் திருமணம் நடந்தது! நிஜமாகத்தான் சொல்கிறேன்!

அந்தப் புத்தகத்தில் ஒரு விசேஷம்—பெண்களான நமக்கு உதவியான ஓர் அம்சம் சேர்க்கப்பட்டிருக்கு....

லலிதா: என்ன அது?

பத்மா: 'நவக்கிரக கோலம்' போட வேண்டிய முறையைப் படம் போட்டுக் காட்டியிருக்கிறது. ஒவ்வொரு நாளுக்கும் ஒரு தனிக் கோலம் போடலாம்.

உங்கள் பிள்ளையை அச்சுத் துறையில் ஈடுபடுத்த விரும்புவீர்களா? பிரிண்டிங் டெக்னலஜி படிக்க வைத்தால் உதவியாக இருக்குமே?

லலிதா: பன்னிரண்டு வயதுதானே ஆகிறது அவனுக்கு. அவன் எதிர்காலம் எப்படி இருக்குமோ? அச்சு வேலையோ நச்சு வேலையோ என்பார்கள். எனக்கு இதில் அவ்வளவு விருப்பம் இல்லே. ஆனால் அவனோ தாத்தா ஆரம்பிச்ச பிஸினஸை அப்பா பார்த்து வருகிறார். அவர் ரிடையர் ஆனதும் நான் அவர் பொறுப்பை ஏற்பேன் என்கிறான். கடவுள் சித்தப்படி நடக்கட்டும்!... ஒன்று கேட்கிறேன். கர்ப்பிணிகள் சுந்தரகாண்டம் படிப்பதால் சுகப் பிரசவம் ஆகும்; பொதுவாகவே சுந்தர காண்டம் படித்துப் பாராயணம் செய்வதால் சுப காரியங்கள் நடக்கும் என்றெல்லாம் சொல்கிறார்களே. உங்கள் நிறுவனத்திலிருந்து பக்தி நூல்களை வாங்கிக் கொண்டு போய்ப் படிப்பவர்கள் அப்புறம் திரும்பி வந்து தங்களுக்கு ஏற்பட்ட நன்மைகள் பற்றி ஏதும் கூறியதுண்டா?

பத்மா: ஓ! சமீபத்திய போரின்போதுகூட அப்படி ஒரு நிகழ்ச்சி நடந்திருக்கிறது! பங்களா தேஷுக்குச் சென்ற இந்திய வீரர் ஒருவர் பாண்டிச்சேரியைச் சேர்ந்தவர். போரின் போது அவர் காணாமல் போய்விட்டார் எனக் கேள்விப்பட்டுக் குடும்பமே கவலைப்பட்டது. கைதானாரா, இறந்துவிட்டாரா, அல்லது, கானகங்களில் வழி தப்பிப் போய்விட்டாரா ஒன்றுமே தெரியவில்லை. பாண்டிச்சேரியில் யாரோ சொல்லக் கேட்டு 'ராமாயண பாராயணமும் சகல காரிய சித்தியும்' புத்தகம் ஒன்றை எங்களிடமிருந்து வாங்கிச் சென்று பக்தியுடன் குடும்பத்தார் படித்துவந்தார்கள். அந்தக் குடும்பத்துக்கு ஆனந்தம் தரும் செய்தி சில தினங்களுக்கு முன் கிடைத்துவிட்டது. காணாமல் போனவர் கண்டுபிடிக்கப்பட்டு விட்டதாக அதிகாரபூர்வமாகச் செய்தி கிடைத்திருக்கிறது! இதைவிட வேறு என்ன உதாரணம் வேண்டும்? இப்படிப் பலர் தந்தமது அநுபவங்களைக் கடிதங்களில் எழுதி இருக்கிறார்கள்.

உங்கள் அச்சகத்திலும் பல உன்னதமான நூல்கள் அச்சாகி யிருக்குமே?

லலிதா: பெரும் பகுதி மத சம்பந்தமானதும், வேதாந்த சம்பந்தமானதுமான புத்தகங்கள்தான். திருவண்ணாமலை ரமணாசிரமம், மயிலாப்பூர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், புதுவை அரவிந்த ஆசிரமம் முதலிய நிறுவனங்கள் வெளியிடும் புத்தகங்கள்.

(ஸ்ரீமதி லலிதாவும் அவர் கணவரும் இணைப்பவே ஸ்ரீமதி பத்மாவதி வரதன், தேங்காய் பழம், பாக்கு, வெற்றிலையுடன் மீனாட்சி கல்யாணம் படம் போட்ட அழகிய காலண்டர் ஒன்றையும் கொடுத்தார். தன் நாத்தனாருக்கு நடக்கப் போகும் திருமணத்துக்கு அவசியம் வரவேண்டும் எனவும் கூறினார்.

திருமணத்தில் ஆரம்பித்த பேச்சு திருமண அழைப்புடனேயே முடிவுற்றது!)

உரையாடல் தொகுப்பு: ஏ. சுவாமிநாதன்.

# படித்துப்பாருங்கள்

## திருவிந்திரபுரி அநுமான் பிள்ளைத் தமிழ்

பக்திதான் என்னவெல்லாம் செய்துவிடுகிறது! மகாவீர பராக்கிரமனான அநுமனை அவனது அன்னை அஞ்சனை கொஞ்சி மகிழ முடிந்ததோ இல்லையோ, நாம் அறியோம். தொட்டிற் பிள்ளையாக இருந்த போதே சூரியனைப் பழமென நினைத்து வானுக்கு எழும்பியவனல்லவா ஆஞ்சநேய ஸ்வாமி? அப்படிப்பட்டவனை பக்தியினால் கட்டிப் பிடித்து வைத்து, அமுதத் தமிழில் பாடி, தாலாட்டி, செங்கீரை — சப்பாணி, — அம்புலி, — சிற்றில்— சிறுபறை போன்ற விளையாட்டுக்களை யெல்லாம் செய்ய வைத்திருக்கிறார் இந் நூலாசிரியர் காலஞ்சென்ற வித்துவான் வி. கோபால கிருஷ்ண ஐயர். ''இந்நூல் பிள்ளைத் தமிழ் இலக்கணம் பூர்ணமாகப் பொருந்தி...... அநுமானின் செயல்களை இராமாயணக் கதையை அநுசரித்து சப்தப்ராசம் அர்த்த புஷ்டியுடன் வர்ணிக்கிறது. தமிழறிந்த பக்தர்கள்......... ஸ்ரீ ஆஞ்சநேய மூர்த்தியை இந்நூலின் மூலம் மகிமை உணர்ந்து போற்றி எல்லா நற்பயன்களையும் அடைவார்களாக'' என்று ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள், ஆசியுரை வழங்கிவிட்ட தொன்றே நூற்பெருமைக்குப் போதுமான சான்று. ஆசிரியரின் புதல்வர் தந்தைக்கு ஆற்றும் அரும் பணியாக இந்நூலினை இலவசமாக அளிக்கிறார். கீழ்க் காணும் முகவரிக்கு எழுதிப் பெறலாம்:

ஸ்ரீ ஜி. கிருஷ்ணமூர்த்தி, ஆனைமேலகரம், மல்லியம் அஞ்சல், தஞ்சை மாவட்டம்.

## சின்னஞ் சிறு கிளியே!

சின்னஞ் சிறு வயதிலே ஆடிப் பாடி மகிழும் ஆர்வம் அதிகம். அந்தச் சின்னஞ் சிறு மதலையர் பாடிக் களிக்கப் பாரதியாரின் குழந்தைப் பாடல்களை அழகிய சித்திரங்களுடன் தொகுத்துத் தந்திருக்கிறார் திருநாவுக்கரசு.

காலை எழுந்தவுடன் படிப்பு - பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு - என்று
வழக்கப்படுத்திக்கொள்ளு பாப்பா!''

என்று குழந்தைச் செல்வங்களை வேண்டிக் கொண்ட கவியரசர் பாரதியின் நூல் இளம் சிறார்களின் கரங்களை அலங்கரிக்க வேண்டிய நூலாகும்.

பிரசுரம்: வானதி பதிப்பகம், பாண்டி பஜார், சென்னை-17; விலை ரூ. 1-00.

# உங்கள் அனல்உலை சுட்ட கற்கள் காலதாமதமாக இயங்கினால் ஒவ்வொரு கணமும் பணம் விரயமாகும்

இதைவிட அதிமோசம் இது எப்பொழுது இயங்கத் தொடங்குமோ என்று தெரிந்து கொள்ள முடியாதது.

ஆனால் இந்தப் பிரச்னை உங்களைத் தீண்டாது. நீங்கள் உங்கள் தேவைகளை ஒரிஸ்ஸா சிமெண்டிடம் ஒப்படைத்து விட்டால், இதில் காலதாமதம் கிடையாது; எங்களிடம் சால்ஜாப்புகள் இல்லை. உங்களுக்குக் குறிப்பிட்ட காலத்தில் உங்கள் அனல்உலை கற்கள் வந்தடையும்.

நாங்கள் நீண்டகால ஆர்டர்களையும் ஏற்றுக் கொள்கிறோம். நீங்கள் எங்கள் டால்மியா அனல்உலை சுட்ட கற்களை வாங்கினால் அதன் தரம் நிச்சயம் உயர்தரமாக இருக்கும்.



GOVAN/OCL/7112

## ஒரிஸ்ஸா சிமெண்ட் லிமிடெட்

தொழிலகம் : ராஜ்கங்க்பூர், ஜில்லா, சுந்தர்கர், ஒரிஸ்ஸா
தலைமை அகம் : 4, சிந்தியா ஹவுஸ், புதுதில்லி-1




கல்கியையும் அதில் வெளியாகும் கருத்துக்களையும் தொடர்ந்து வாசித்தும் பின்பற்றியும் வரும் குடும்பம் எங்கள் குடும்பம். 1958ம் ஆண்டு என்று எண்ணுகிறேன். — யுவர்களுக்கு வேண்டுகோள்! — என்று தலைவர் ராஜாஜி எழுதியிருந்ததைப் படித்து அதுவரை பிடித்து வந்த புகையை நிறுத்தியவன் நான். தஞ்சாவூர் ரயில் நிலையத்தில் இரவு ஒன்பது மணிக்கு மேல் 'கல்கி' இதழ் வாங்கிக் கையில் சிகரெட்டும் திப்பெட்டியும் தாங்கிப் புகைத்துக் கொண்டே ரயில் ஏறி நெல்லை புறப்பட்டேன். தலையங்கம் படித்து, பின்னர் 'யுவர்களுக்கு வேண்டுகோள்' படித்து முடித்தபோது ரயில் திருச்சியை நெருங்கிக் கொண்டிருந்தது. அப்போது ஐம்பது சிகரெட்டுள்ள டின் கையிலிருந்ததையும், திப்பெட்டியையும் பெருக்கெடுத்து ஓடும் காவிரியில் எறிந்தவன். நீண்ட காலமாக நிறுத்த இயலாத புகைபிடிக்கும் பழக்கத்தை நிறுத்தினேன். அன்று முதற்கொண்டு சிகரெட்டைத் தொடுவதில்லை.

சென்னை—15
17—2—72 நெல்லை ஆ. கணபதி

மாநிலங்களுக்குச் சுயாட்சி அளித்தால் டில்லியில் உள்ள பாராளுமன்றம் சக்தியற்றதாகி விடும். மக்கள் சபை அதிகாரத்தை இழந்தால் நாட்டு மக்களுக்குத் தீமைதான் ஏற்படும். தமிழ் நாட்டில் மதுவிலக்கை ரத்து செய்தது ராஜ்ய அரசு தன் அதிகாரத்தைத் தவறான மார்க்கத்தில் செலுத்தியதற்குச் சான்றாகும்.

சென்னை—17
2—3—72 சி. ஆர். சீனிவாசன்

மார்க்கெட்டிங் கமிட்டியை (ஒழுங்குமுறை விற்பனைக் கூடம்) குறைகூறி 5—3—72 கல்கி இதழில் வெளியிடப்பட்டிருந்த வட்ட மேஜை கடிதமொன்றைக் கண்டு நான் ஆச்சரியமடைந்தேன். விவசாயிகளின் நன்மையை நோக்கமாகக் கொண்டுதான் மார்க்கெட்டிங் கமிட்டி நடத்தப்படுகிறதே தவிர, விவசாயிகளைத் தொல்லைக்குள்ளாக்க வேண்டும் என்று அல்ல. விவசாயிகள் தாங்கள் உற்பத்தி செய்த விளைபொருள்களை நல்ல விலைக்கு விற்க இயலாமல் வியாபாரிகளிடம் ஏமாறுமலிருக்கவே மார்க்கெட்டிங் கமிட்டி செயல்படுகிறது. உண்மையைச் சொல்லப் போனால் விவசாயிகளை வியாபாரிகள் கொள்ளையடிப்பதைத் தடுக்கின்ற காவல் நிலையமே மார்க்கெட்டிங் கமிட்டி.

அன்பர் நடராஜன் குறிப்பிட்டிருப்பது போல் விவசாயிகளின் ஜீவாதார உரிமையை மார்க்கெட்டிங் கமிட்டி பறிக்கவில்லை. அவர்களுடைய உழைப்பை மற்றவர்கள் அனுபவிக்கின்ற உரிமையைத்தான் பறிக்கிறது.

சான்றாக—

எங்கள் ஊரான அந்தியூரில் மார்க்கெட்டிங் கமிட்டி இருக்கிறது. எங்கள் ஊரில் பெரிய பருத்தி வியாபாரிகள் நான்கு பேர். மற்ற சிறு வியாபாரிகள் இந்தப் பெரிய வியாபாரிகளுக்கு அடக்கம். — கிளைகள். இந்த நான்கு வியாபாரிகளும் தங்கள் விருப்பப்படி ஒருமுகமான பேச்சோடு பருத்தி வியாபாரத்தில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். மார்க்கெட்டிங் கமிட்டி தலையிட்டது. தங்கள் மூலமாகப் பருத்தியை விற்பனை செய்யும்படி விவசாயிகளைக் கேட்டுக் கொண்டது. கமிட்டி மூலமாகப் பருத்தியை விற்பனை செய்தபோது வியாபாரிகளிடம் தாங்கள் ஏமாந்து கொண்டிருந்ததை விவசாயிகளே புரிந்து கொண்டனர். தனிப்பட்ட வியாபாரிகள் கொடுத்த விலைக்கும், கமிட்டி மூலமாகக் கிடைத்த விலைக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருந்தது. எங்கள் ஊர் பருத்தி வியாபாரிகள் முகத்தில் கரியைப் பூசிக்கொள்ள வேண்டியதாயிற்று.

தனிப்பட்ட வியாபாரிகள் பொருட்களை எடை போடுவதிலும் — எடை போடும் கருவிகளில் ஏதாவதொரு தகிடுதத்தத்தைக் கையாண்டு — விவசாயிகளை ஏமாற்ற முடிகிறது. கமிட்டி அதையும் தடுக்கிறது. அது மட்டுமா? விவசாயப் பொருட்களை மூட்டை பிடிக்கச் சாக்குப் பைகளையும் இலவசமாகக் கொடுத்து, பொருட்களை இருப்பு வைக்கவும் இடம் தருகிறது. பொருட்கள் விற்பனையான பின் சாக்குப் பைகளைத் திரும்ப எடுத்துக் கொள்ளுகிறது. இடத்துக்கு வாடகை கேட்பதில்லை. பொருட்களை விற்பனை செய்து கொடுத்ததற்காக கமிஷன் என்றோ, வேறு வகையிலோ பைசா எடுப்பதுமில்லை!

நிச்சயமாக எந்தக் கமிஷன் கடையும் மார்க்கெட்டிங் கமிட்டியை விட பொருள்களை அதிக விலைக்கு விற்றுவிடவில்லை. சொல்லப்போனால் விவசாயிகளிடம் கமிஷன் என்ற பெயரில் கொள்ளைதான் அடிக்கிறார்கள்.

கமிஷன் மண்டிகள் விவசாயிகளுக்கு முன் பணம் தருவதும், அந்த வசதி மார்க்கெட்டிங் கமிட்டியில் இல்லாததும் உண்மைதான். ஆனால் கமிஷன் மண்டிகள் ஆறு அல்லது ஏழு சதவிகிதம் விவசாயிகளிடம் கமிஷன் பெற்றுக் கொள்ளுகின்றன. மார்க்கெட்டிங் கமிட்டி கமிஷன் எடுப்பதில்லை. இந்த உண்மையை — லாபத்தை — ஒப்புக்கொள்ள வேண்டும். முன் பணம் கொடுப்பதன் மூலம் கமிஷன் மண்டிகள் விவசாயிகளைத் தங்கள் வலையில் போட்டுக் கொள்ளுகிற உண்மையையும் உணர வேண்டும்.

மார்க்கெட்டிங் கமிட்டியை இவ்வளவு போற்றி எழுதுகின்ற நான் தி. மு. க.காரனோ அல்லது ஓர் அரசாங்க அதிகாரியோ அல்லது கமிட்டியில் வேலை செய்யும் அதிகாரியோ அல்ல; நானும் விவசாயிதான். கமிட்டியின் சேவையையும் தேவையையும் உணர்ந்திருக்கிறவர்களில் ஒருவன்.

அந்தியூர்,
2—3—72 மு. தவசியப்பன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# ஊழியர்—தொழிலின் ஜீவநாடி



இயந்திரங்கள் மற்றும் மூலப் பொருள்களை விட ஊழியர்கள் —அதாவது, அவரவர்கள் தொழிலை கற்றறிந்து நன்கு பயிற்சி பெற்றவர்கள் இன்றியமையாதவர்கள் ஆவார்கள். 1921ல் ஜம்ஷெட்பூர் டெக்னிகல் இன்ஸ்டிட்யூட் நிறுவப்பட்டது முதல், கடந்த 50 வருடங்களாக இந்த உண்மை ஜம்ஷெட்பூரில் வலியுறுத்தப்பட்டு வந்திருக்கிறது. வருடம் 29 லட்ச ரூபாய் செலவுத் திட்டப்படி இயங்கி வரும் இந்த இன்ஸ்டிட்யூட் எங்கள் பணித்துறைத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொண்டு வருகிறது. மானேஜிங் டைரெக்டர் முதல், பள்ளி இறுதிப் படிப்பு முடிந்து பயிற்சி முடித்த முற்றும் புதிய ஊழியர் வரை இங்கு உருவாகின்றனர். பற்பல வருடங்களாக உருப்பெற்றிருக்கும் டெக்னீஷியன்களின் எண்ணிக்கை 19000. தவிர, சுமார் 2000 எஞ்ஜினீயர்கள் மற்றும் இயக்குனர்களுக்குப் பயிற்சி அளித்து கவர்மெண்ட் ஸ்டீல் ப்ளாண்ட்களுக்கும் சேவை புரிந்திருக்கிறது.

**டாடா ஸ்டீல்**

எங்கள் பலம் உறுதிமிக்க எஃகில் மட்டுமல்ல. திறமைமிக்க ஊழியர்களிலும் உள்ளது.

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon


# இந்தியா பிஸ்டன்ஸ்

## தற்போது கீழ்கண்ட கார்களுக்கு பிஸ்டன்களை தொடர்ச்சியாக சப்ளை செய்கின்றனர்

அம்பாஸடர் • பியட் • ஹெரால்டு • லாண்ட்மாஸ்டர் • டாட்ஜ் • ஸ்டாண்டர்டு 10
வான்கார்டு • மாரிஸ் 8 • மாரிஸ் மைனர் • ஆஸ்டின் 8 • ஆஸ்டின் 10
ஆஸ்டின் A40 • போர்டு ஆங்கிளியா/பாபுலர் மற்றும் போர்டு ப்ரிபெக்ட்



குறைந்த எண்ணெய் செலவு அமைதியான என்ஜின் இயக்கம்



இந்தியா பிஸ்டன்ஸ் லிமிடெட் சென்னை-11
அமால்கமேஷன்ஸ் குரூப் கம்பெனிகளின் ஓர் நிறுவனம்

தென் பிராந்திய விநியோகஸ்தர்கள்
நோர்த் ஓக்ஸ் லிமிடெட்
மதுரா ஆட்டோ சர்வீஸ்
ஸ்ரீட்-ஏ-வே பிரைவேட் லிமிடெட்

IP 182 AT